## எவ்வளவு தூய்மையானது பாருங்கள்!




பியர்ஸ் சோப்புக் கட்டியை வெளிச்சத்துக்கு எதிரே பிடித்துப் பாருங்கள்— நேரடியாக அதன் மூலம் உங்களால் ஊடுருவி நோக்க முடியும்!

ஆம், பியர்ஸ் தூய்மை என்றால் அதுதான்! பச்சிளங் குழந்தையின் மென்மையான சருமத்துக்கும் பரிபூரணமான பாதுகாப்புத் தரும் அளவுக்கு பியர்ஸ் அவ்வளவு தூய்மையும் மென்மையும் கொண்டது!

## எவ்வளவு நல்லதென்று உணருங்கள்!



பியர்ஸ் சோப் உங்கள் சருமத்துக்கு நல்லது. அசல், க்ளிஸரின் அடங்கிய இந்த அழகு தரும் சோப் சருமத்தைப் பல்லாண்டுகள் மிருதுவான எழிலுடன் வைத்திருக்கிறது. பியர்ஸ் சோப்பைத் தவறாமல் உபயோகிக்கத் தொடங்குங்கள்.




# பியர்ஸ் சோப்

அசல், க்ளிஸரின்
அடங்கிய, அழகு தரும் சோப்

லண்டனிலுள்ள ஏ & எப். பியர்ஸ் லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது. TP. 45-50 TM

# கல்கி சுதந்திர மலர்

## பொருளடக்கம்

ஆகஸ்டு 19, 1956



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.





# *Yesterday's Glory-*



## *To-day's Pride!*



பதினேழாவது நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்தே இந்தியாவில் தந்த வேலைத் தொழில் சிறப்பும் திறமையும் பெற்று புகழுடன் திகழ்ந்து வருவதால், அத்தொழிலே இந்தியாவின் தலை சிறந்த நுட்பத் தொழிலாக கூற முடியும். அதுபோலவே அணுவளவும் பிசகாது, ஒழுங்காக ஓட வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் தயாரிக்கப்படும் வெஸ்ட். எண்ட் கெடியாரங்களும் தலைசிறந்த தொழில் திறமை வாய்ந்தவர்களின் பெருமைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இந்தியாவில் முக்கால் நூற்றாண்டுக்கு மேலாக நிலவி வரும் நம்முடைய புகழுக்கு நம்பிக்கையான தரமே ஓர் சான்று.

SOWAR PRIMA SPECIAL THIN
Centre - Second
Everbright Steel — Rs. 181



**WEST END WATCH CO.**

BOMBAY · CALCUTTA



மலர் 16 | இதழ் 3 | துன்முகி ௵ ஆவணி 4

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# பத்தாவது சுதந்திர தின விழா

பாரத புண்ணிய பூமி சுதந்திரம் பெற்று ஒன்பது ஆண்டுகள் ஓடிவிட்டன.

சுதந்திர பாரதத்தின் பத்தாவது ஆண்டு ஆகஸ்டு பதினைந்தாம் தேதி புதன் கிழமை ஆரம்பமாகிறது. இந்தப் பத்தாவது சுதந்திரத் திருவிழாவைப் பாரத மக்கள் யாவரும், இந்தியாவில் உள்ளவர்களும் சரி, வெளி நாடுகளில் உள்ளவர்களும் சரி, — குதூகலமாகக் கொண்டாடுவார்கள்.

சென்ற ஆண்டுகளைக் காட்டிலும் இந்த ஆண்டில் இன்னும் அதிக ஆனந்தத்துடன் கொண்டாடுவார்கள்.

ஏனெனில் சென்ற ஒன்பது ஆண்டுகளில் பாரதநாடு உள் நாட்டிலும் உலக அரங்கிலும் நிறைவேற்றியுள்ள சாதனைகள், இந்திய மக்களுக்குத் தளரா உறுதியையும் நம்பிக்கையையும் அளித்திருக்கின்றன.

திலகர்பிரான், காந்திமகான் போன்ற சத்தியசீலர்களின் தியாகம் வீண் போகாது என்பதை உலகத்துக்குக் காட்ட இந்திய மக்கள் உறுதி கொண்டுள்ளனர்.

நேருஜியின் தலைமையினாலும் தியாக புருஷர்களின் உழைப்பினாலும் சுதந்திர பாரதம் சுபிட்ச இலட்சியத்தை நோக்கி வெகு வேகமாக முன்னேறி வருகிறது.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் பூர்த்தியாகி, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட வேலைகள் மும்முரமாக நடைபெற்று வருகின்றன.

விவசாயம் வளரவும், தொழில் துறைகள் பெருகவும், கல்விக்கும் கலைகளுக்கும் ஆக்கமளிக்கவும் ஐந்தாண்டுத் திட்டத்தில் வழி வகுத்துள்ளனர்.

மேற்படி திட்டத்தை, நாடு செழித்து மக்கள் நல்வாழ்வு பெறுவதற்கேற்ற சுபிட்சத் திட்டம் என்றே சொல்ல வேண்டும்.

இருநூறு வருஷங்கள் வரையில் அந்நியர் ஆட்சியில் அல்லல்பட்டு, அரசியல் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் படுபாதாளத்தில் கிடந்த பாரத நாட்டை, பத்து ஆண்டுகளுக்குள் அகில உலகமும் வியக்கும்படியான மகோன்னத நிலைக்குக் கொண்டு வந்த மாபெரும் இந்தியத் தலைவர்களுக்குப் பாரத மக்கள் என்றென்றும் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

சுதந்திரதேவி குமரிமுனையிலிருந்து இமய சிகரம் வரையில் வெற்றிக்கும் சுதந்திரத்துக்கும் அறிகுறியான அசோக ஸ்தூபியை ஒரு கையிலும், சுபிட்சத்துக்கு அறிகுறியான தானியக் களஞ்சியத்தை மற்றொரு கையிலும் ஏந்தி நிற்கும் அருமையான காட்சியையும், தாயின் மணிக்கொடி பட்டொளி வீசிக் கம்பீரமாகப் பறப்பதையும், இந்தக் கண்கொள்ளாக் காட்சியை ஜோதி வானிலிருந்து காந்தி மகான் பார்த்துக் களிப்பதையும் இந்த வாரத்துக் 'கல்கி' சுதந்திர மலரின் அட்டையில் மகிழ்ச்சியுடன் வெளியிட்டிருக்கிறோம்.

# லண்டன் மகாநாட்டின் கடமை

எகிப்து நெருக்கடி சம்பந்தமாக லண்டனில் நடக்கப் போகும் சர்வதேச மகாநாட்டில் இந்தியா கலந்து கொள்ளத் தீர்மானித்திருப்பதாக நேருஜி லோக சபையில் அறிவித்துள்ளார். ஆனால் அம் மகாநாட்டில் எகிப்து கலந்து கொள்ளாது என்று எகிப்து ஜனாதிபதி நாஸர் கூறிவிட்டார். எனினும் லண்டன் மகாநாட்டில் இந்தியா கலந்து கொள்ளுவதால், எகிப்தின் கௌரவத்துக்கோ, நலன்களுக்கோ, சுதந்திர உரிமைகளுக்கோ எவ்விதக் குந்தகமும் ஏற்படாது; எகிப்துப் பிரச்னையைச் சமாதானமாகத் தீர்க்க இந்தியா மேற்படி மகாநாட்டில் பெருமுயற்சி செய்யும் என்று நேருஜி உறுதி கூறியிருப்பது, உலகம் யுத்தப் படுகுழியில் விழுந்து விடக் கூடாது என்பதில் அக்கறை கொண்ட சகலருக்கும் ஆறுதல் அளிக்கும்.

எகிப்து நெருக்கடிக்கு நாஸர்தான் பொறுப்பாளி என்று அவர் மீது வசைமாரி பொழியும் பிரிட்டிஷ் சர்க்கார் தலைவர்கள் தாங்கள் செய்த தவறுகளை உன்னிப் பார்க்கவில்லை.

சூயஸ் கால்வாய் எகிப்தின் எல்லைக்கு உட்பட்டது. அது எகிப்து நாட்டைச் சேர்ந்த ஒரு பிரதேசம். எனவே, அதைத் தங்கள் உடைமையாக்கிக் கொள்ள எகிப்து சர்க்கார் தீர்மானித்ததில் தவறு எதுவும் இல்லை. வாய்க்காலின் ஆதி பட்டயத்தின்படி 1968-ம் ஆண்டில் வாய்க்காலும் கம்பெனியின் முழுச் சொத்தும் எகிப்து சர்க்காருக்கு யாதொரு விலையோ நஷ்ட ஈடோ தராமல் சேர்ந்து விட வேண்டும். யாதொரு தகராறுமின்றித் தானாகவே அக் கம்பெனியின் நிர்வாகம் 1968—ல் எகிப்தின் கைக்கு வந்து விடும்.

இப்போது சூயஸ் கால்வாய் கம்பெனிக்கு நியாயமான ஈடுத் தொகை கொடுக்க ஜனாதிபதி நாஸர் தயாராக இருக்கிறார். சூயஸ் வழியாகச் செல்லும் கப்பல்களுக்கு அவர் கட்டணத்தை உயர்த்தவில்லை. அவ் வழியாக உலக நாடுகளின் கப்பல்கள் போக்குவரத்துக்கு எவ்விதத் தடையும் இராது என்றும் உறுதி கூறி, செயலிலும் காட்டி வருகிறார்.

ஆனால், பிரிட்டன் செய்துள்ள காரியம் என்ன? பிரிட்டிஷ் பாங்கிகளில் உள்ள எகிப்துக்குச் சொந்தமான நிதிகளையெல்லாம் முடக்கிவிட்டது. இது எவ்வளவு நாணயமற்ற, அடாத செய்கை என்பதை, சென்னையில் சென்ற வாரம் பேசிய ராஜாஜி அவர்கள் தம்முடைய விரிவான சொற்பொழிவில் தெளிவாக விளக்கியிருக்கிறார். இந்தியா பிரிக்கப்பட்ட பிறகு பாகிஸ்தான் காஷ்மீர்

## போலிக் காதல்!




பிரிட்டிஷ் பிரதம மந்திரி ஈடன்: நமக்கு எகிப்துடன் சண்டையில்லை, எகிப்தின் தலைவர் நாஸருடன்தான் சண்டை என்று கூறுகிறார்.

## பம்பாய் ராஜ்யம் வளர்ந்தது!



"சின்னஞ் சிறு ராஜ்யங்கள் ஏற்படுவதை விடத் தேசத்தின் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பெரிய ராஜ்யங்கள் ஏற்பட வேண்டும்." — நேருஜி.
இதை மொரார்ஜி தேசாய் பரிபூரணமாக ஆதரிக்கிறார்.

மீது படையெடுத்து நமது சிப்பாய்களைக் கொன்று குவித்து வருகையில்கூட, பாகிஸ்தானுக்குச் சேர வேண்டிய ஐம்பது கோடி ரூபாயை ரொக்கமாக உடனே கொடுத்து விடும்படி காந்திஜி ஆலோசனை கூறியதை ராஜாஜி சுட்டிக் காட்டினார். பாங்கியில் உள்ள பணத்தை முடக்குவது நாணயமற்ற, சர்வ தேச நியதிக்கு முரணான செய்கை என்பதையும் விளக்கினார். பிரிட்டிஷ் தலைவர்களின் இருதயத்திலிருந்து ஏகாதிபத்திய வெறி இன்னும் அடியோடு ஒழியவில்லை என்பதையே மேற்படி செய்கைகள் காட்டுகின்றன. அப்படியிருந்தும் எகிப்துத் தலைவர் நாஸர் மிகுந்த பொறுமை காட்டி வருவதை ராஜாஜி பாராட்டினார்.

இன்னும் பன்னிரண்டு ஆண்டுகளில் பூஜ்யமாகப் போகும் ஒரு சொத்துக்கு இப்போது எவ்வளவு தொகை நஷ்ட ஈடு கொடுக்க வேண்டியிருக்கும் என்பதும் பெரிய சிக்கலான கணக்கல்ல. எகிப்து நாட்டுக்கு லாபம் வரும் காலத்தில் நல்ல வருமானம் தரும் என்று எண்ணித்தானே எகிப்து நாட்டு அரசர் அந்தக் காலத்தில் லெஸ்ஸெப்ஸ் என்ஜினீரின் யோசனையை ஒப்புக் கொண்டு இடமும் நாற்பது லட்சம் பவுண்டு பணமும் மற்ற வசதிகளும் தந்தார். இப்போது மேற்கு வல்லரசுகள் சொல்லும் ஒரு வாதம் இதற்கு முற்றிலும் முரண். கடல் வழியில் வரும்படியான சுங்க வருமானத்தை எகிப்து தேசம் தன்னுடைய சொந்த நலனுக்காக மட்டிலும் எடுத்துக் கொண்டு விடுவது அநியாயம் என்று வாதம் செய்கிறார்கள். வருமானத்தை யெல்லாம் வாய்க்காலின் விருத்திக்கே செலவு செய்ய வேண்டும்; அது ஒரு தனி அரசாட்சியாகவே இருக்க வேண்டும்; எகிப்து நாட்டுக்கு வேண்டுமானால் கொஞ்சம் பிச்சை கொடுக்கலாம் என்கிறார்கள்! இந்த வாதத்தின் அக்கிரமத்தை விரித்து விளக்க வேண்டியதில்லை.

1968-ம் ஆண்டு நெருங்கி வருகிறது. அதற்குள்ளாகவே எகிப்துக்கு நியாயமாகச் சேர வேண்டிய இந்தச் சொத்தைப் பறிமுதல் செய்துவிட வேண்டும் என்கிற இந்தத் துராக்கிரக முயற்சியை முழு மூச்சுடன் எதிர்க்க வேண்டியது நியாய உணர்ச்சியுள்ள ஒவ்வொருவருடைய கடமையாகும்.

# சென்னை ராஜ்யத்தின் ஆட்சிமொழி

சென்னை சட்டசபை, மேல் சபை இரண்டிலும் உள்ள அங்கத்தினர்கள் அடங்கிய கூட்டத்தில் சென்ற வாரம் கவர்னர் ஸ்ரீபிரகாசா அவர்கள் பேசியபோது, பல முக்கிய விஷயங்களைக் குறிப்பிட்டார். காப்பி, தேயிலை, மண்ணெண்ணெய் முதலிய மற்றும் சில சாதனங்களுக்கு ஒரே முனையில் விற்பனை வரி விதிக்கும் திட்டம் அடுத்த வருஷம் ஏப்ரல் மாதத்திலிருந்து அமுலுக்கு வரும் என்று கவர்னர் உறுதி கூறி யிருப்பதைக் கண்டு, சில்லறை வியாபாரிகள் மாத்திரமல்ல, பொது மக்களும் மகிழ்ச்சி யடைவார்கள். பல முனைகளில் விற்பனை வரி விதிப்பது இறுதியில் மக்களின் தலையில்தானே வடிகிறது? மற்றும் பல சாதனங்களுக்கு ஒரு முனை விற்பனை வரி விதிப்பது பற்றியும் சர்க்கார் ஆலோசிப்பார்கள் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் படி சென்னை ராஜ்யத்தில் பல அபிவிருத்தி முறைகள் கைக்கொள்ளப்படுமென்றும் கவர்னர் குறிப்பிட்டார். விவசாயிகளுக்குப் பல புதிய வசதிகள் செய்து கொடுக்கப்படுவதுடன், பல ஜில்லாக்களிலும் சிறிய குடிசைத் தொழில்களுக்கு ஆக்கம் அளிக்கப்படும் என்று கவர்னர் கூறியிருப்பதை வரவேற்காதவர்கள் இருக்க முடியாது.

கவர்னரின் பிரசங்கத்தில் இதெல்லாவற்றையும் விட முக்கியமாகத் திகழ்வது ராஜ்ய நிர்வாக மொழி பற்றிய விஷயம் தான். சர்க்கார் நிர்வாகம் இப்போது ஆங்கிலத்தில் நடந்து வருகிறது அல்லவா? ஆங்கிலத்திலிருந்து தமிழ் மொழிக்கு மாற்றுவது எப்படி என்பது பற்றிச் சர்க்கார் ஆலோசித்து வருகிறார்கள்; கூடிய சீக்கிரம் தமிழையே ராஜ்ய நிர்வாக மொழியாக அமுலுக்குக் கொண்டு வர உத்தேசித்திருக்கிறார்கள் என்று கவர்னர் அறிவித்திருக்கிறார். இந்த அறிவிப்பு தமிழ் மக்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கும் என்பது நிச்சயம்.

ஆங்கிலம் சர்வ தேச முக்கியத்துவம் வாய்ந்ததெனினும், அதைப் பாமர மக்கள் அன்னிய ஆட்சியின் சின்னமாகவே கருதுகிறார்கள். தவிர, சுதந்திர நாட்டில் அன்னிய மொழி உள்ளூர் விவகார மொழியாக இருப்பது விரும்பத்தக்கதுமல்ல. காலதாமதமின்றித் தமிழை அமுலுக்குக் கொண்டு வர வேண்டியது சர்க்காரின் முக்கிய கடமையாகும். அந்த நன்னாளைத் தமிழ் மக்கள் ஆர்வத்துடன் எதிர்பார்த்து வருவார்கள்.



சென்ற சனிக்கிழமை மாலை சென்னை ராயப்பேட்டையிலுள்ள உலக விவகார சபையின் ஆதரவில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. ராஜாஜி அவர்கள் 'சூயஸ் கால்வாய் விவகாரம்' பற்றி ஒரு நீண்ட சொற்பொழிவு நிகழ்த்தினார். ராஜாஜி அவர்கள், குழப்பம் நிறைந்த சூயஸ் கால்வாயின் சரித்திரம், பிரிட்டனுக்கு சூயஸில் ஏற்பட்ட ஆதிக்கம், அஸ்வான் அணைக்கு உதவுவதாக வாக்குறுதி அளித்த அமெரிக்கா பின்னும் வாபஸ் வாங்கிய நம்பிக்கைத் துரோகம், எகிப்தின் பணத்தைப் பிரிட்டன் முடக்கி விட்ட அநீதி ஒரு பக்கம், மத்தியதரைக் கடலுக்குத் துருப்புகளை அனுப்பிக் கொண்டு மற்றொரு பக்கம் சமரச மகாநாட்டுக்கு அழைப்பு அனுப்பும் விந்தை, இவர்களுக்கு மாறாக எகிப்தின் தலைவர் நாஸருடைய நேர்மை முதலிய எல்லா விஷயங்களையும் ஆதியோடந்தமாக விவரித்துத் தெளிவாகவும், ரஸமாகவும் உபமான உபமேயங்களுடனும் சுமார் இரண்டு மணி நேரம் ஆங்கிலத்தில் பேசினார். லண்டனில் மகாநாடு கூட்டும் வல்லரசுகளும், இரு தேசத்துப் பிரதானிகளும் ராஜாஜியின் இந்தப் பிரசங்கத்தை ஒரு தடவை முழுதும் படித்து விட்டுக் கூடினால் பெரும் பயன் ஏற்படும் என்பது நமது நம்பிக்கை. ராஜாஜி அவர்கள் பேசுவதையும் கூட்டத்தினரையும் படத்தில் காணலாம்.

---

# நம்பிக்கையில்லாத் தீர்மானம்

கொழும்பு, ஆக. 12வ.

பண்டாரநாயகா மந்திரி சபையிடம் நம்பிக்கை யில்லையென்று தெரிவித்து யாழ்ப்பாணம் முனிஸிபல் சபை ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி யிருக்கிறது. தமிழ் மொழியை ஒதுக்கிச் சிங்களத்தை மட்டும் ராஜாங்க மொழியாக்கியதால் தமிழ் மக்களின் நம்பிக்கையை அரசாங்கம் இழந்த விட்டதாகத் தீர்மானத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. ஒற்றையாட்சி முறையையும் பெரும்பான்மை வகுப்பினரின் கையில் அதிகாரத்தையும் ஏற்படுத்திய ஸோல்பரி அரசியல் திட்டத்தைத் தமிழ்த் தலைவர்கள் எப்பொழுது ஆதரித்து வோட்டுக் கொடுத்தார்களோ அப்பொழுதே தமிழர்களுக்குப் போதாத காலம் ஏற்பட்டுவிட்டதென்று நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய பலரும் சொன்னார்கள். தீர்மானத்தை ஆதரித்துப் பன்னிரண்டு பேர்கள் வோட்டுக் கொடுத்தனர். இருவர் வோட்டுக் கொடுக்கவில்லை.

தமிழ் மொழிப் பாதுகாப்பு இயக்கத்தின் ஆதரவில் சுவாமி தனிநாயகம் அடிகள் நாட்டின் பல பகுதிகளிலும் சுற்றுப் பிரயாணம் செய்து சொற்பொழிவாற்றி வருகிறார். சென்ற வாரம் நாவலப்பிட்டியில் அவர் பேசியபொழுது, தேசிய பாஷை இயக்கத்துக்கு வித்திட்டது இலங்கை சர்வகலாசாலைதான் என்றும், இப்பொழுது அங்கேயே ஒரு மொழியை அமுல் நடத்தி, வகுப்புவாதத்தைப் புகுத்துகிறார்களென்றும் தமிழ் மொழியின் பாதுகாப்புக்காகத் தமிழ் பேசும் மக்கள் ஒற்றுமையுடனும் கட்டுப்பாடுடனும் போராடவேண்டுமென்றும் கூறினார். அரசாங்கத்தின் தனிச் சிங்களக் கொள்கையை அவர் அழுத்தமாகக் கண்டித்தார். அரசாங்கத்தைக் கண்டிப்பவர்களெல்லாம் அமெரிக்க உதவி பெறுவதாகக் கூறுவது இலங்கையில் இப்பொழுது ஒரு வழக்கமாகி வருகிறது. இது வெறும் பொய்க்கூற்று என்பதைப் பொது மக்கள் அறிந்துகொள்ள வேண்டும்.

தமிழ் அரசுக் கட்சியின் வருடாந்திர மகாநாடு இம்மாதம் 18ம் தேதி திரிகோணமலையில் நடைபெறவிருக்கிறது. இதற்குப் பெரிய தோரணையில் முன்னேற்பாடுகள் நடக்கின்றன. தமிழரசுக் கட்சிக்கு ஸ்ரீ வி. வன்னியசிங்கம் மீண்டும் தலைவராக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

—ரஜனி


STAINLESS STEEL
VK
M.M.&Co.
V.K BRAND

# என்ன சேதி?

## பாரதத்தின் நன்கொடை

மலேயா சர்வகலாசாலைக்கு இந்திய சர்க்கார் பத்தாயிரம் ரூபாய் நன்கொடை அளித்திருப்பது மிகவும் பாராட்டுதற்குரிய ஒரு நற்காரியமாகும். மேற்படி சர்வகலாசாலையில் இந்திய கலாச்சாரக் கல்வியின் வளர்ச்சிக்காகவே நமது சர்க்கார் அத் தொகையைக் கொடுத்திருக்கிறார்கள். சென்ற வருஷத்திலும் இந்திய சர்க்கார் மலேயா சர்வகலாசாலைக்கு ஆறாயிரம் ரூபாய் கொடுத்தது ஞாபகம் இருக்கலாம். மலேயாவில் உள்ள இந்திய சர்க்கார் பிரதிநிதி ஸ்ரீ ஆர். கே. தாண்டனிடமிருந்து அத் தொகையைப் பெற்றுக் கொண்ட சர்வகலாசாலை உப அத்தியட்சகரான ஸ்ரீ சிட்னி கெயின் இந்திய சர்க்காருக்குத் தமது நன்றியைத் தெரிவித்துக் கொண்டுள்ளார். அங்கு இந்திய மொழிகளில் பயிற்சி பெறுவதற்கு வசதிகள் அளிக்க வேண்டும் என்பதே இந்திய சர்க்காரின் நோக்கமாகும்.

இலங்கைக்கு அடுத்தபடியாக மலேயாவில்தான் குறிப்பாக அதிகத் தமிழர்கள் வசிக்கிறார்கள். எனவே இந்தியாவுக்கும் மலேயாவுக்கும் நெருங்கிய தொடர்பு இருக்க வேண்டியது எவ்வளவு அவசியம் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. அத்தகைய தொடர்பு நீடிப்பதற்கு இந்திய சர்க்காரின் நன்கொடை ஆக்கமளிக்கும். இதைத் தவிர, ஆசியா நாடுகளைச் சேர்ந்த தொண்ணூறு மாணவர்களுக்கு இந்தியக் கலாசாலைகளில் பயிற்சிபெற வருஷந்தோறும் உதவித் தொகையும் அளித்து வருகிறார்கள். இது போன்ற நற்பணிகளால் ஆசியாவில் பாரத நாட்டின் மதிப்பும் செல்வாக்கும் பன்மடங்கு பெருகும் என்பது நிச்சயம்.

## ராஜ்ய சர்க்கார்களின் கடன் திட்டம்

பாரத நாட்டின் ஆக்கத் திட்டங்களை நிறைவேற்றுவதற்காகப் பதினைந்து ராஜ்ய சர்க்கார்கள் பொது மக்களிடமிருந்து மொத்தம் 64 கோடி ரூபாய் கடன் வாங்கத் தீர்மானித்திருக்கிறார்கள். சென்னை ராஜ்ய சர்க்கார் மாத்திரம் 12½ கோடி ரூபாய் கடன் வாங்கப் போவதாக அறிவித்துள்ளனர். அடுத்த செப்டம்பர் மாதம் 3-ந் தேதியிலிருந்து கடன் பத்திரங்கள் விநியோகிக்கப்படும். சமீபத்தில் இந்திய சர்க்கார் கோரிய கடன் தொகையைக் காட்டிலும் அதிகத் தொகை வசூலானதிலிருந்து சர்க்காரிடம் பொது மக்களுக்குள்ள நம்பிக்கை நன்கு புலனாயிற்று. அது போலவே, ராஜ்ய சர்க்கார்கள் கோரும் கடன் தொகையைக் காட்டிலும் அதிகத் தொகை வசூலாகி விடும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

முக்கியமாக, விவசாய அபிவிருத்திக்காகவும், தொழில்களுக்கு இன்றியமையாத மின்சார அபிவிருத்திக்காகவுமே கடன் வாங்கப் படுகிறது. மேற்படி கடன் பத்திரங்கள் வாங்குவோருக்கு நாலு சதவிகிதம் வட்டி கிடைத்து விடுகிறது. பன்னிரண்டு வருஷங்களில் முதலும் கிடைத்துவிடும். பத்திரங்கள் வாங்குவோருக்கு லாபமே ஒழிய எவ்வித நஷ்டமும் இல்லை. அதனால் ஆக்கத் திட்டங்கள் நிறைவேறி, மக்கள் மகத்தான பலன் அடைவார்கள் என்பதை விவரிக்க வேண்டியதில்லை. எனவே, சர்க்காரின் முயற்சிக்குப் பொதுமக்கள் பூரண ஆதரவளித்து, நாட்டின் சுபிட்சத்துக்கான திட்டங்கள் நிறைவேறுவதற்கு உதவி புரிவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

## சட்டசபையில் அரிசி விஷயம்

உணவுப் பண்டங்களின் விலை, முக்கியமாக, அரிசியின் விலை உயர்ந்து கொண்டு போவதைப் பற்றிச் சென்னை சட்ட சபையில் கேட்கப்பட்ட சரமாரியான கேள்விகளுக்கு விவசாய மந்திரி கொடுத்துள்ள பதில் பொதுமக்களுக்கு எவ்வித ஆறுதலும் அளிப்பதாக இல்லை. நிலைமையைச் சர்க்கார் சிரத்தையுடன் கவனித்து வருவதாக மந்திரி கூறியுள்ளார். சம்பிரதாயமான இந்தப் பதிலால் விலை உயர்வுப் பிரச்னை தீர்ந்து விடாது. பர்மாவிலிருந்து கணிசமான அளவுக்கு அரிசி வரப் போவதாகவும் செய்திகள் கூறுகின்றன. மேற்படி அரிசி எந்தக் காலத்தில் வரும் என்பதே இப்போது கேள்வியாகும். அப்படியே வந்தாலும் அது எத்தகைய அரிசியாக இருக்குமோ! அரிசி விலை இறங்காததால், மற்ற உணவுப் பொருள்களின் விலையும் ஏறுமுகமாக இருந்து வருகிறது. இந்திய சர்க்காரிடம் ஏராளமாக அரிசி இருப்பதாயும், அந்தச் சேமிப்பை விடுவிக்கும் பட்சத்தில் அரிசி விலை இறங்கலாமென்றும் சிலர் கருதுகின்றனர். ஏழைகளுக்கு மிகுந்த துன்பத்தைக் கொடுத்து வரும் இந்த முக்கியமான பிரச்னை உடனடியாகத் தீருவதற்கு வழிவகை செய்ய வேண்டியது சென்னை சர்க்காரின் கடமை என்பதை வற்புறுத்த விரும்புகிறோம்.

# பாரத தேசமென்று ...



சுதந்திரம் பெற்ற பின் பாரத நாடு
உள்நாட்டுக் கொந்தளிப்புகளையும்...
பாரதம்




...பல பயங்கரப் பிரச்னைகளையும்
வெற்றிகரமாகச் சமாளித்தது
அகதிகள்
பணப் பெருக்கம்
உணவுப் பஞ்சம்




பாகிஸ்தான்
பாகிஸ்தானின் துவேஷப்
பிரசாரங்களால் பாதிக்கப்
படாமல்....




...இன்று உலகத்தின் நன் மதிப்புடன்
பாரதம் கம்பீரமாக முன்னேறுகிறது

# ... தோள் கொட்டுவோம்!


இந்தியாவின் குரலுக்கு இப்போது அகில
உலகமும் மரியாதையுடன் செவி
சாய்க்கிறது
இந்தியாவின்
குரல்
௫


பல வல்லரசுகள் இந்தியாவுடன் நெருங்கிய
நட்பு கொண்டிருக்கின்றன
௬


பாரத நாட்டுடன் நெருங்கிய உறவு
கொள்ளாத நாடுகள் இருப்பினும்..
௭


... உலகம் அபாயப் படுகுழியில் விழுந்து
விடாமல் காப்பாற்றி வருவது இந்தியா
தான் என்பதை எல்லா நாடுகளும்
ஒப்புக் கொள்-
-கின்றன.
௮

# ஆகஸ்ட் பதினைந்து



இந்தவாரம் பத்தாவது ஆண்டு சுதந்திர தினத்தைக் கொண்டாடுகிறோம்.

1947 ஆகஸ்ட் பதினைந்தில் பாரத தேசம் அந்நிய ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றது. ஆகஸ்ட் பதினைந்தின் சிறப்பு இந்திய நாட்டின் விடுதலை மட்டுமல்ல. அந்த நாள் உலகத்துக்கே ஒரு புதுச் சக்தியை ஊட்டிய திருநாளாகும்.

பாரதத்தில் நடைபெற்ற விடுதலைப் போராட்டத்தின் வெற்றி உலகத்துக்கு ஒரு பேருண்மையை எடுத்துக் காட்டி விட்டது.

இனி எந்த நாடும் மற்றொரு நாட்டை அதன் அனுமதியின்றி அடிமைப்படுத்தி ஆட்சி நடத்தமுடியாது: ஒருநாடு தானே இஷ்டப்பட்டோ, அல்லது மயக்கத்திலாழ்ந்தோ சில காலம் அடிமைப் பட்டுக் கிடக்கலாம்: மயக்கம் தீர்ந்து விழித்து விட்டால் அந்நிய ஆதிக்கம் போயே தீரவேண்டும். இந்தஉண்மையை உலகத்துக்கு எடுத்துக் காட்டிய பெருமை பாரதத்தினுடையது. இது உலக சமாதானத்துக்குச் செய்யப்பட்ட ஒரு பெருந் தொண்டாகும்.



ஆனபடியால் ஆகஸ்ட் பதினைந்து பாரத நாட்டின் சுதந்திரத் திருநாள் மட்டுமல்ல. அடிமைத் தளையிலுள்ள நாடுகள் அனைத்துக்கும் சுதந்திரம் நிச்சயம் உண்டு என்பதை ஸ்திரப் படுத்திய திருநாளாகும்.

'அந்நிய ஆதிக்கம் ஏற்பட்டுவிடுமோ' என்று நடுங்கும் நாடுகளுக்கெல்லாம், ''பயம் வேண்டாம்; நீங்கள் சம்மதித்தாலன்றி உங்களை யாரும் அடிமைப் படுத்த முடியாது'' என்று தைரியம் ஊட்டும் திருநாளாகும்.

ஒரு நாடு பிற நாடுகளின்மீது ஆதிக்கம் செலுத்துவது முடியாத காரியம் என்று பாரத விடுதலைச் சரித்திரம் நிரூபித்து விட்டது. பிற நாடுகளின் மீது ஆதிக்கம் செலுத்த ஆசைப்படும் நாடுகளும், வல்லரசுகள் எங்கே ஆதிக்கம் செலுத்துமோ என்று பயந்து நடுங்கும் நாடுகளும், இந்த இரு வகை நாடுகளுக்குமே இந்தியாவின் விடுதலை ஒரு பேருண்மையை எடுத்துக் காட்டி விட்டது. மக்களின் விருப்பத்துக்கு மாறாக அவர்களை அடிமைப்படுத்தி வைப்பது வீண் முயற்சியாகும். அப்படியே அந்நிய நாடுகளின் ராணுவ பலத்தைக் கண்டு அனாவசியமாகப் பயந்து தம் தேசத்தின் பொருள் சம்பத்தையும் வருமானத்தையும், ராணுவ பலத்தைப் பெருக்குவதிலும் அணு குண்டுகளைச் செய்வதிலும் செலவழித்துக் கஷ்டப்பட வேண்டியதில்லை என்றும் உறுதியாயிற்று.

ஆகவே, உலகத்தில் இன்றைய கேள்வி இதுதான். வல்லரசுகள், எதிரியை ஒடுக்குவதற்கென்று ராணுவத்தைப் பலப்படுத்தி உலகை என்றென்றும் யுத்த பீதியில் ஆழ்த்தி வைக்கப் போகின்றனவா? அல்லது அக்கிரமம் செய்ய முயலும் பகைவனை ஒடுக்கக் கூடியது மனிதனின் ஆத்ம சக்தியே என்று பாரதம் காட்டிய சாந்த வழியைப் பின்பற்றப் போகின்றனவா?

ஆகஸ்ட் பதினைந்து மனிதனுடைய ஆத்ம சக்தியை உலகத்துக்கு எடுத்துக் காட்டிய நாளாகும். எந்த ராணுவ பலத்தையும் விட ஆன்ம பலம் சக்தி வாய்ந்தது என்பதை உலகத்துக்கு எடுத்துக் காட்டிய நன்னாளாகும். இந்த விரிந்த பொருளில் அதைக் கொண்டாடுவோம்.

ஆகஸ்ட் பதினைந்தாம் தேதியில் பாரதம் சுதந்திரம் பெற்றது என்று கொண்டாடுவதோடு, உலகத்துக்கே சுதந்திரமும் சமாதானமும் அளிக்கும் சக்தியை காந்தி மகான் வரமாகத் தந்த நன்னாள் என்று கொண்டாடுவோமாக!



# பாரத தேசம்

பாரத தேசமென்று பெயர் சொல்லுவார்—மிடிப்
பயங் கொல்லுவார் துயர்ப் பகை வெல்லுவார்,
பாரதப் போரில்வென்ற கண்ணன் அருளால்—துயர்ப்
பாரம் அறுவார் செல்வப் பாரம் உறுவார்

வெள்ளிப் பனிமலையின் மீதுலவுவோம்—அடி
மேலைக் கடல்முழுதும் கப்பல் விடுவோம்
பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம்—எங்கள்
பாரத தேசமென்று தோள் கொட்டுவோம்

சிங்களத் தீவினுக்கோர் பாலம் அமைப்போம்
சேதுவை மேடுறுத்தி வீதி சமைப்போம்
வங்கத்தில் ஓடிவரும் நீரின் மிகையால்
மையத்து நாடுகளில் பயிர் செய்குவோம்

வெட்டுக் கனிகள்செய்து தங்க முதலாம்
வேறு பலபொருளும் குடைந் தெடுப்போம்
எட்டுத் திசைகளிலும் சென்றிவை விற்றே
எண்ணும் பொருளனைத்தும் கொண்டு வருவோம்

# மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

பட்டினில் ஆடையும் பஞ்சில் உடையும்
பண்ணி மலைகளென வீதி குவிப்போம்
கட்டித் திரவியங்கள் கொண்டு வருவார்
காசினி வணிகருக்கு அவை கொடுப்போம்

ஆயுதம் செய்வோம், நல்ல காகிதம்செய்வோம்
ஆலைகள் வைப்போப், கல்விச்சாலைகள் வைப்போம்
ஓயுதல் செய்யோம், தலைசாயுதல் செய்யோம்
உண்மைகள் சொல்வோம், பல வண்மைகள் செய்வோம்

'சாதி இரண்டொழிய வேறில்லை' யென்றே
தமிழ்மகள் சொல்லிய சொல்அமிழ்தம் என்போம்
நீதி நெறியினின்று பிறர்க் குதவும்
நேர்மையர் மேலவர்; கீழவர் மற்றோர்

மணியம்

# அபலை அஞ்சுகம்

## 7. கதைக்கேற்ற மனிதன்!




வந்திடப் பத்தும் பறந்து போம்' என்று சொல்வதெல்லாம் சுத்த வறட்டுப் பேச்சு என்பது சொக்கனின் அபிப்பிராயம். ஆனால் இப்போது அந்த வசனம் மிகவும் உண்மையானது என்பதை அவன் அறிந்துகொண்டான். பசி வந்தால் பத்தென்ன, பன்னிரண்டாய் இருந்தாலும் பறந்துதான் போகும் என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான். மேகராஜபுரத்துக்கு அவன் எவ்வளவு வேகமாகவும், ஆத்திரத்தோடும் கிளம்பினானோ, அத்தகைய விருவிருப்பும் சுறுசுறுப்பும் அப்பொழுது அவனுக்கு இல்லை. பாவம்! அவனுடைய வயிற்றுப் பசி உடலை மாத்திரமல்ல, உள்ளத்தையும் சிறிது தளர்ச்சியடையச் செய்து விட்டது.

காலையிலிருந்து அவன் ஒன்றுமே சாப்பிடவில்லை. காலையில் அவன் தொழில் நிமித்தமாக நகர் சுற்றக் கிளம்பியபோது மேகராஜபுரத்தில் நடந்த கொள்ளையைப் பற்றிக் கேள்விப் பட்டதும் மிகுந்த பதைபதைப்போடு அஞ்சுகத்தைப் பார்க்கப் போய் விட்டான். அதனால் காலை ஆகாரத்துக்கு எதுவும் வழி செய்ய முடியாமல் போய் விட்டது. அஞ்சுகத்தைப் போய்ப் பார்த்து அவளிடம் விவரம் அறிந்ததும் அவனுக்கு மேகராஜபுரத்துக்குச் செல்ல வேண்டுமென்ற துடிப்பு ஏற்பட்டுக் கிளம்பி விட்டான். ஆனால் வயிற்றுப் பசி...? பசியோடு நாலு மைல்கள் நடப்பதென்றால்...? 'ஒரு கப் சாயா குடித்தால் போதும்' என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான்.

ஒரு கப் டீக்காவது எங்காவது தேட்டமிடலாமென்றால் அந்தச் சந்தர்ப்பம் சரியானதாக இல்லை. காலை வேளையில் சந்தைக் கடை பக்கத்தில் கூட்டம் அதிகமாக இருக்கும். சௌகர்யமாக எதுவும் செய்து விடலாம். ஆனால் அப்பொழுது பொழுதேறி விட்டது. கூட்டம் கலைந்திருக்கும். இந்தச் சமயத்தில் என்ன செய்யமுடியும்? அவன் யோசனை செய்தபடியே வாட்டத்தோடு தள்ளாடிக்கொண்டு நடந்தான்.

கொடிமரத்து மூலையிலுள்ள சாயாக் கடை நாயர் அவனுக்கு மிகவும் பரிச்சயமானவன். தினமும் அந்தக் கடையில் தானே அவன் டீ சாப்பிடுகிறான்? பரிச்சயமாகாமல் எப்படி இருக்கும்? என்ன பரிச்சயமாய் இருந்தாலும் காசில்லாமல் அங்கு போய் டீ குடிக்க முடியாது. என்ன செய்வது? நாயர் அவ்வளவு கறார் பேர்வழி. வேண்டுமானால் ஸ்பெஷலாகப் போட்டுக்கொடுப்பான். கடன் என்றால் கண்டிப்பாக மறுத்து விடுவான். சாப்பிட்டு விட்டுக் கடன் சொல்லலாமென்றாலும் நாயரின் ஆவேச அடியைப் பொறுத்துக் கொள்ள உடம்பில் பலம் வேண்டும். இதெல்லாம் சொக்கன் அனுபவத்தில் உணர்ந்த உண்மை. கொடிமரத்து மூலைக்கு வரும் எத்தனையோ போக்கிரிகளைக் கண்டு அவனுக்கு அனுபவம். சொக்கன் டீக் கடை நாயரிடம் மிகவும் நாணயமாகத்தான் நடந்து கொள்ளப் பிரியப் பட்டான். மிகவும் சத்தியசந்தனாகத்தான் அவனிடம் பேசுவான். ஆனால் அவன் சொக்கனுடைய நாணயத்தை நம்பினாலல்லவா? அவனுக்கா தெரியாது, அங்காடிப் பேட்டை ஆசாமிகளைப் பற்றி? எப்படியோ சொக்கன் தளர்ந்த உள்ளத்தோடு கொடிமரத்து மூலைக்கே நடந்து வந்து விட்டான். அந்த வேளையிலும் அவனுக்கு அதிருஷ்டவசமாக ஏதாவது சிக்கக் கூடாதா?

கொடிமரத்து மூலைக்குச் சமீபமாக ஒரு பிள்ளையார் கோயில் இருந்தது. அந்தக் கோயிலுக்கு அடுத்தாற்போல் ஒரு வாய்க்கால் மதகு. அந்த மதகின்மேல் உட்கார்ந்த வண்ணம் பிள்ளையார் கோயில் சுவரில் ஒட்டியிருக்கும் சினிமா விளம்பரம் ஒன்றை மிகவும் ஆர்வத்தோடு கவனித்துக் கொண்டிருந்தார் ஒரு மனிதர். அவருக்குப் பக்கத்தில் ஒரு சிறு கோணி மூட்டை வைக்கப் பட்டிருந்தது. அவரைப் பார்த்ததுமே பக்கத்துக் கிராமம் எதிலிருந்தோ ஏதோ வியாபார நிமித்தமாகச் சந்



கி.ரா.கோபாலன்



தைக்கு வந்த மனிதர் என்பதை உணர்ந்து விட்டான் சொக்கன்.

பெரிய தலைக் கொண்டையை வெளியே விட்டுக் கட்டியிருக்கும் முண்டாசு, காதில் அணிந்திருக்கும் சிவப்புக் கல் வைத்த வெள்ளிக் கடுக்கன், ஏதோ அதிசயத்தைக் கண்டது போல் விழிகளை அகலத் திறந்து சினிமா விளம்பரத்தைக் கண் கொட்டாமல் பார்க்கும் பார்வை — நாடா கட்டிக் கழுத்தில் சுருக்கிட்ட வலை பனியன், முழங்காலைத் தொடும் அளவுக்குத் தூக்கிப் பிடித்துப் பனியனுக்கு மேலாகக் கட்டி இருக்கும் வேஷ்டி, மடியில் வைத்துக் கட்டியிருக்கும் பெரிய வெற்றிலைச் சருகுப் பை, ஒரு காலில் போட்டிருக்கும் வெள்ளிச் சித்து, கையில் அணிந்திருக்கும் சங்கு மோதிரம் — இத்தகைய கோலத்திலுள்ள ஒரு மனிதனைக் கண்டதும் அதிருஷ்டவசமாக ஒரு உத்தமன் தன் கண்ணில் பட்டுவிட்டதாகச் சொக்கன் ஒரு கணத்தில் தீர்மானித்து விட்டான். இனிமேல் அவன் தயங்குவானா? தாமதிப்பானா? மெதுவாக அந்த மனிதனுக்குச் சமீபமாகப் போய் ஒட்டினாற்போல் நின்று தானும் மிக வியப்போடு அந்தச் சினிமா விளம்பரத்தைப் பார்த்தான். அந்த மனிதர் தம் பக்கத்தில் வந்து நின்ற சொக்கனைப் பார்த்துத் திகைப்படைந்தவராகச் சிரித்து அசடு வழிந்த முகத்துடன், ''இந்தப் படம் நல்லா இருக்கில்லே? சும்மாப் பார்த்தேன்'' என்றார்.

சொக்கன் சிரித்துக் கொண்டே, ''சும்மா பாருங்க, பரவாயில்லே. சும்மா பார்க்கட்டும்னுதானே சுவரிலே கொண்டு வந்து அதை ஒட்டி வைச்சிருக்காங்க'' என்றான்.

அந்த மனிதர் வஞ்சனையில்லாமல் ஒரு அசட்டுச் சிரிப்பு சிரித்து விட்டு, ''இதிலே அக்கா தங்கை நாலு பேரும் நடிக்கிறாங்கன்னு போட்டிருக்கே. அவுங்க தாயாரும் நடிக்கிறாங்கன்னு எங்காவது போட்டிருக்கான்னுதான் இத்தனை நேரமா நான் பார்த்துக்கிட்டிருக்கேன்'' என்றார்.

''அவங்க தாயார் நடிச்சிருந்தாத்தான் படம் வெற்றிகரமா ஓடியிருக்குமே- பயித்தியக்காரங்க - இந்தப் படமெடுத்தவங்களுக்கு உங்களுக்குத் தோணுகிற யோசனையெல்லாம் தோணுகிறதா...? பத்து வருஷங்களுக்கு முன்னால் இந்தச் சகோதரிகளின் தாயார் அவயாம்பாள் இருக்கிறாளே, அவளுக்கு ஐம்பது ஐம்பத்திரண்டு வயசுக்குள்ளேதான் இருக்கும். அப்போ சகாரா ஸ்டுடியோவிலே 'அழகியின் அழுகை' என்கிற படத்துக்கு ஷூட்டிங் நடக்குது. நானும் அங்கே இருக்கேன். அந்தப் படத்திலே அவயாம்பாதான் கதாநாயகி. அடாடா! அதை நினைச்சா இப்பொழுதும் நான் அழுவேன். ஒரு படத்திலே கதாநாயகி பாடுகிற பாட்டு முழுவதும் அழுகிறது போலவே இருக்கணும்னு சாமான்யமா? அவயம் அத்தனை பாட்டையும் அழுகிறப்பிலேயே பாடியிருக்கிறாங்க, தெரியுமா?''

''உங்களுக்குச் சினிமாத் தொழில்லே மிக அனுபவம் இருக்கும் போலிருக்கே''

திட்டமிட்டு முன்னேற்றம்

# சோஷலிஸ சமுதாயத்தை நோக்கிப் பயணம்...











நம் நாட்டில் திட்டமிடுவதின் பிரதான லட்சியங்கள்: மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது: பூரணமான மேம்பட்ட வாழ்க்கைக்கு யாவருக்கும் பூரண சந்தர்ப்பமளிப்பது.

**முதல் ஐந்தாண்டுத் திட்டம் ( 1951 - 56 )**

**சாதனைகள்:**

- அதிக உணவு
- நிறைய பண்டங்கள்
- மேலான சமூக சேவை
- ஏராளமான வேலை வசதி
- உயர்தர வாழ்க்கைத் தரம்

**இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் 1956 - 61**

**லட்சியங்கள்**

- தேசிய வருமானத்தை மேலும் அதிகரித்தல்
- துரிதமாய் தொழில்மயமாக்குதல்
- வேலை வாய்ப்புகளை ஏராளமாய் விஸ்தரித்தல்
- வருமானத்திலும் செல்வத்திலும் ஏற்ற தாழ்வுகளைக் குறைத்தல்
- பொருளாதார செல்வாக்கை இன்னும் சமமான ரீதியில் விநியோகித்தல்




## நம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம்

தேசிய சுபிட்சத் திட்டம்

DA 56/52 TM

என்றார் அந்த மனிதர் பல்லை இளித்துச் சிரித்துக் கொண்டே.

''ரொம்ப அனுபவப் படாவிட்டால் எவனும் என்மாதிரி இருக்கவே முடியாது. பாருங்க, இன்றைக்குக் காலையிலே யிருந்து ஒரு டீத் தண்ணிக்குக் கூட வழி கிடையாது.''

''ஐயோ பாவம்! உங்களை நினைத்தால் பரிதாபமாய் இருக்குது.''

''என்னைப் பற்றிப் பரிதாபப் படவே படாதீங்க. பரிதாபப் படறதுன்னு அந்த அவயாம்பாளைக் குறித்துப் பரிதாபப் படுங்க. இந்தக் காலத்திலே அவள் வயற்றிலே பிறந்த பெண்களுக்கெல்லாம் மகத்துவம் மிஞ்சிப் போச்சு. அவளுக்கு இன்னும் ஒரு சான்ஸ் கிடைக்கல்லே பாருங்க....''

''வயசாயிடுச்சில்லே..அழகு..''

''அழகா..? அழகு எங்கே ஓடிப் போயிடப் போகுது. அது வயசுக்குத் தகுந்தாப்பிலே கொஞ்சம் மாறும். அவ்வளவுதானே? சினிமாவிலே மேக்கப் செய்யறவங்க ளெல்லாம் எதுக்கு இருக்காங்க? உதாரணமா உங்களையே எடுத்துக்குவோம். ஆறடி உயரம் இருக்கீங்க. குறைந்தது நூற்று நாற்பது பவுண்டு எடையாவது இருப்பீங்க. கண்ணு தெரியுது. காது கேட்குது. வாய் பேசுது. நடக்கிறீங்க. சாப்பிடுறீங்க. எதுவும் குறையில்லே. ஏன் உங்களுக்கு ஒரு கதாநாயகன் வேஷம் கொடுக்கக் கூடாது? சொல்லுங்க...'' என்று சொல்லி அந்த மனிதரின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான்.

அந்த மனிதருக்கு ஏற்பட்ட புளகாங்கிதம் கொஞ்சம் வெட்கத்தையும் சங்கோசத்தையும் கிளறி விட்டது. அவர் தம் வெற்றிலைக் காவி படிந்த பல்லைக் காட்டிக் கொண்டே, ''நீங்க சொல்றதெல்லாம் சரிதாங்க. ஆனா நமக்கு சான்சு...'' என்று இழுத்தார்.

''சான்ஸ் - அதுதான். நல்ல மனிதனுக்கு அதிருஷ்டமில்லேன்னு சொல்றாங்க பாருங்க - அது இதுவேதான் - இப்போ என்னிடம் ஒண்ணரை லட்ச ரூபாய் இருக்கட்டும்- உடனே உங்களைக் கதாநாயகனகப் போட்டு அவயத்தைக் கதாநாயகியாகப் போட்டு நான் எழுதி வைத்திருக்கும் 'காலைப் பசி' என்ற கதையைப் படமாக்கி விடுவேன்.''

''படமாக்கலாமுங்க - ஆனால் பணமாக்க வேணுமே...?''

''பணம் கிடக்குதுங்க. இந்தச் சினிமாத் தொழிலிலேயே ஒரு ரகசியங்க. பணமாக்கணும்னா அநுபவம் கிடைக்காது. அநுபவம் வேண்டுமானால் பணத்தை லட்சியம் செய்யக்கூடாது. ஆனால் பணம் மாத்திரம் தன் சொந்தப் பணமாக இருக்கக் கூடாது.''

''அதுவும் சரிதாங்க. காலை வேளையில் நீங்க ரொம்பப் பசியாய் இருக்கீங்க போலிருக்கே'' என்றார் அந்த மனிதர்.

''பசி தான். என்ன செய்யறது! உங்களைப் போல என் கதைக்குப் பொருத்தமான நடிகர்களைப் பார்த்து விட்டால் பசி பறந்து போய் மனசிலே பெரிய கலக்கந்தான் ஏற்படுது.''

''கலங்காதீங்க. உங்களுக்கும் ஒரு காலம் வர்ாமலா போயிடப் போகுது?''



''காலம் வந்துடுத்துங்க. அதுக்குத்தான் இன்று நான் மேகராஜபுரம் கிளம்பினேன்'' என்றான் சொக்கன்.

''மேகராஜபுரமா........அது எங்க வட்டந்தானுங்க. அந்த ஊருக்கு வடகிழக்கே நாலு கல்லிலே நத்தாஞ்சேரி இருக்குது பாருங்க, அதுதான் எங்க ஊருங்க. எனக்குத் துவரம் பருப்பு வியாபாரமுங்க. துரைக்கண்ணுன்னா எல்லோருக்கும் தெரியும்.''

''அடடே! நீங்கதானா அது? நான் கேள்விப்பட்டிருக்கேன். போன தடவை நான் மேகராஜபுரம் ஜமீன்தாரிணி அம்மா வீட்டுக்கு வந்தபோது சினிமாவுக்காக நான் எழுதி வைத்திருக்கும் 'காலைப் பசி' என்கிற கதையைப் படிச்சுக் காட்டினேன். உடனே அவங்களே சொன்னாங்க, அந்தப் படத்திலே கதாநாயகனாய் நடிக்கத் துவரம்பருப்பு வியா

பாரம் துரைக்கண்ணுவைப் போட்டால்தான் தோதுப்படும்னு - அடடே! அது நீங்கதானு...?''

''நான்தாங்க - ஜமீன்தாரிணி அம்மாவே என்னைப் பற்றிச் சொன்னுங்களா...?அவங்களே பணம் போட்டுச் சினிமா எடுக்கப் போருங்களா? நல்ல காரியங்க - வயசான காலத்திலே.. அதிருக்கட்டும்! இன்னும் நீங்க காலை ஆகாரம் எதுவும் செய்யல்லேயே - இந்தாங்க. அந்த டீக்கடையிலே போய் ஏதாச்சும் சாப்பிட்டு வாங்க'' என்று சொல்லி ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினுர்.

''அடடே! இது என்ன? நீங்க பணத்தை வைச்சுக்கிங்க. அந்த டீக்கடை நாயர் நமக்கு ரொம்ப வேண்டியவரு. வேண்டியதைச் சாப்பிட்டுட்டு நாளைக்குத் தரேன்னு கேட்பாரு'' என்றுன் சொக்கன்.

''அட! இதிலே என்னங்க கடன்? இதிலே எனக்குத்தான் என்ன குறைந்து போயிட்டுது? பணத்தைக் கையிலே வாங்கிக்கிங்க. வேண்டியதைச் சாப்பிட்டுவிட்டு வாங்க. நான் இங்கேயே உட்கார்ந்திருக்கேன். காலை வேளையிலே வெறும் வயிற்றேடே இருக்காதீங்க'' என்றுர் துரைக்கண்ணு.

சொக்கன் வேறு வழியில்லாதவன் போல் அந்தப் பத்து ரூபாய் நோட்டை வாங்கிக் கொண்டு எதிரிலிருந்த டீக்கடையை நோக்கி நடந்தான்.

அந்த டீக்கடைக்கு இரண்டு வாசல்களும் உண்டென்று துரைக்கண்ணுவுக்குத் தெரியாது. சொக்கன் அநேக தடவை அந்தக் கடைக்குள் எந்த வாசல் வழியாக வந்தானே அந்த வழியாகவே வெளியே போவதில்லை. ஆறணுவுக்கு டீ பலகாரம் சாப்பிட்டு விட்டு அங்கிருந்த தன் நண்பன் ஒருவனிடம் ஒரு பீடி இரவல் வாங்கிக் கொண்டான். மீதிப்பணத்தைச் சரியாக எண்ணி வாங்கிக் கொண்டு பின்புற வழியாகப் போய் விட்டான் சொக்கன்.

பாவம், துரைக்கண்ணு! துவரம்பருப்பு மூட்டையுடன் மதகடியில் உட்கார்ந்து சொக்கன் எப்பொழுது வெளியே வரப் போகிறுன் என்று ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்!

* * *

சொக்கன் மேகராஜ புரத்தை அடைந்த பொழுது சூரியன் மேற்கு வாயிலில் மறையும் நேரம்! இலேசாக இருள் சூழ்ந்து கொண்டிருந்தது. அந்த வேளையில் பார்வதியம்மாளின் வீட்டைக் கண்டு பிடிக்க அவன் மிகவும் சிரமப்படவில்லை. அந்த வீடு மிகவும் புராதன கட்டடமாக இருந்தது. அது பழைமையான கட்டடமாக இருந்தாலும் அதன் அழகு அவன் மனத்தைக் கவர்ந்தது. முதல் நாள் அந்த வீட்டில் களவு போயிருந்ததால் யாராவது போலீஸ்காரர்கள் அங்கு வட்டமிட்டுக் கொண்டிருப்பார்களோ என்ற பயம் அவனுக்கு இருந்தது. அவன் சுற்றிலும் ஒரு தடவை பார்த்தான். ஒருவரும் இல்லை. போலீஸாருக்குக் களவுபோனது சம்பந்தமாகத் தக்க ஆதாரங்கள் கிடைத்த பிறகும் அங்கு அவர்கள் ஏன் இருக்கிருர்கள்....?

அவன் மிகவும் தைரியமாக அந்த வீட்டின் வாசற் படிக்கு வந்து மூடி இருந்த கதவைத் தட்டினுன். கதவைத் திறப்பதற்கு நிர்மலாதான் வந்தாக வேண்டும் என்று அவனுக்குத் தெரியும். ஏனென்றுல் அந்த வீட்டில் வேலைக்காரிகள் யாரும் இல்லை. வீட்டு எஜமானியும் தள்ளாத வயதினள். நிர்மலாதானே வந்து கதவைத் திறக்க வேண்டும்? அஞ்சுகம் சொல்லிய அங்க அடையாளங்களை ஒரு தடவை மனதால் நினைத்துப் பார்த்துக் கொண்டான்.

நிர்மலாதான் வந்து கதவைத் திறந்தாள். வாசற்படியில் நிற்கும் சொக்கனைக் கண்டதும் அவள் அப்படியே திகைப்படைந்து விட்டாள். ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்ட கணநேரத்தில் அவர்கள் இருவரும் பேச நாவெழாதவர்களாகச் சிலை போலவே நின்று விட்டார்கள்.

சொக்கனுக்கே திகைப்பாகத்தான் இருந்தது. அஞ்சுகம் சொன்னதிலிருந்து நிர்மலா ஓர் அழகி என்றுதான் அவன் அறிந்து கொண்டிருந்தான். ஆனுல் அவள் தங்கத்தால் கடைந்து எடுத்தது போல அவ்வளவு பேரெழிலுடன் விளங்குவாள் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை. அவளுடைய பிரகாசம் நிறைந்த பெரிய கண்களில் எவரையும் பிடித்து இழுக்கும் காந்த சக்தி இருக்கிறது என்பதை அவன் உணர்ந்து கொண்டான். எந்த மனிதனை அவள் பார்த்தாலும் அவன் மனத்தில் ஏதோவொரு உணர்ச்சி ஏற்படுத்தி விடக் கூடிய அழகிய பெண் ஒருத்தி எதிரில் நிற்பதைச் சொக்கன் தெரிந்து கொண்டான். ஏனென்றுல் அந்தச் சமயம் சொடுக்கி இழுக்கும் அவள் கண்களின் பார்வை அவன் மனத்தை மயக்கம் கொள்ள வைத்தது. அந்தச் சமயம் அவளைச் சந்தித்தது பின்னுல் தனக்கு எத்தகைய அபாயத்தைத் தரக் கூடியது என்பதை அப்பொழுது அவன் உணர்ந்து கொள்ளவில்லை! **(தொடரும்)**

# வில்லி வில்ஸன் சொல்லுகிறார்

தண்டனையைப் பற்றி பேசும் பொழுது...

ஒரு பேனா கணக்கற்ற இடித்தலுக்கும் முட்டுதலுக்கும் ஆளாகிறது. நிப்பு முனைப்பக்கமாகவோ அல்லது பாரலின் அகல பக்கமாகவோ பல தடவை கீழே விழுந்தும், பேனா கெடாமலிருக்கவேண்டும். ஆகையால் பேனாக்கள் வலுவுள்ளவைகளாகத் தயாரிக்கப் படவேண்டும்.






ஆகையால் நீங்கள் ஒரு பேனா வாங்கும்பொழுது, பல வித தண்டனையைத் தாங்கக்கூடிய பேனாவையே வாங்குங்கள்... அது தான் வில்ஸன்!

## வில்ஸன்
ரிஜிஸ்டர்டு.



கீழ்க்கண்ட தினுசுகளில் கிடைக்கின்றன:

டிராப்பர் பில்லர் ஸெல்ப் பில்லர்
வேகோபில் மற்றும் ஏரோபில்

விலைகள்: ஒவ்வொன்றும் ரூ. 3/12
இருந்து ரூ. 15/- வரை

இந்தியாவுக்கு பிரத்யேக
வினியோகஸ்தர்கள்:

கிரன் & கோ ப்ரைவேட் லிட்.,
73-75, சிப்பி சால், ஜாவேரி பஜார் சமீபம்,
பம்பாய் - 2.

கிளைகள்:
கல்கத்தா,
மதராஸ்

வில்ஸன் பேனாவுக்கு வில்ஸன் மையையே உபயோகிக்கவும்.

W3 TM

# நான்கு மருந்துகள்

## ஒரு டாக்டரின் குறிப்பைப் போன்றது




'அனஸின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசை நார்களில் நோவு இவற்றை நீக்கும். அனஸினில் அடங்கிய சில நான்கு மருந்துகள் :—

1. கொயினா : ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின் : பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினஸிடின் : ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில் ஸலிஸிலிக் ஆஸிட் : தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்கடிப்பதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனஸினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனஸின்' ஹிருதயத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெற எப்பொழுதும் அனஸினையே கேட்டு வாங்குங்கள்

## லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.

# யோக சிகிச்சை

## சுந்தரம்

### 1. டி. பி. அல்லது க்ஷயம்

இது குணம் ஆகுமா? நிச்சயமாக ஆகும்! ஏன் ஆகாது? யோக சிகிச்சையால் டியூபர்குலாஸிஸ் என்னும் டி. பி. நோய், அதாவது க்ஷயம் முற்றிலும் குணம் ஆகும்!

விஷக் கிருமிகளின் ஆராய்ச்சி தற்காலத்தில் மிகவும் உயர்ந்துள்ளது. டி. பி. நோய் என்பது ஒருவித விஷக் கிருமியால் உண்டாகிறது என்பதை நிச்சயித்துள்ளனர். இந்த ஆராய்ச்சியின் முடிவு என்னவோ எளிதில் தீர்ந்து விட்டது. டி. பி. விஷக் கிருமிக்கு முடிவுதான் மருத்துவ உலகம் காட்டவில்லை! இதற்கும் நமனுக்கும் மிக்க நட்பு! இது புகும் இடமெல்லாம் நமனும் புகுந்து விடுவான்! ஆனால் இந்த டி. பி.க்கே நமன், வைத்திய விஞ்ஞானத்தால் சிருஷ்டிக்கப்படவில்லை!

ஒவ்வொரு நூதன முறையும், மருந்தும், ஏதோ சிலருக்குக் குணத்தைத் தரவே, டி. பி. யைக் கொல்லும் நமன் இதோ என்று தடபுடலாக டமாரம் அடிக்கிறார்கள். சில நாட்களில் இந்த ஆடம்பர ஓசை தானாகவே அடங்கி விடும்! இதற்குள் மருந்து வியாபாரிகள், மருந்து உற்பத்தி சாலை அதிகாரிகள் சில கோடி ரூபாய்களை விழுங்கிவிடுவார்கள்! மறுபடி அதே ஓலம். ''டி. பி.க்கு மருந்தே, கண்டிப்பான சிகிச்சையே கிடையாது!'' என்று முன்னிலும் பலமாய் ஒலித்து வருகிறது. அந்தோ பரிதாபம்!

பெரிய பெரிய மருத்துவ நிபுணர்கள், அரிய முறை ஆராய்ச்சி சாலைகள், அல்லோபதி, ஹோமியோபதி, ஆயுர்வேதபதி, யுனானிபதி இன்னும் என்ன என்ன ''பதி''களால் அடக்க முடியாத ''டி. பி.'' சதியை, யோக சிகிச்சை ''பதி''யால் அடக்கிவிட முடியுமா?'' என்றால் — ''நிச்சயமாக முடியும்!'' என்ற விடையை நம்புவதற்குப் பலர் மறுப்பார்கள்! வைத்திய நிபுணர்களோ, ''இந்தச் சரடு விடாதீர்! எங்கே ஒரு நோயாளியாவது குணமடைந்திருக்கிறார் என்று விரலை மடக்குங்கள், பார்க்கலாம்!'' என்று ஆத்திரம் கொள்ளலாம்.

இம்மாதிரி ஆத்திரம் கொள்வது தவறல்ல! டி. பி. மிகப் பொல்லாதது தான். எனினும் அத்தாட்சிக்காக விரலை மடக்க இரண்டு கைகள் போதா! —அநேக மனிதர்களின் கைகள் வேண்டும்! அவ்வளவு அத்தாட்சிகள் யோக சிகிச்சைக்காகக் கொடுக்க முடியும்!

பழைய கதைகள் எதற்கு? வைத்திய உலகம், இந்த நோயாளிகளை யோக சிகிச்சைக்கு அனுப்பி நம் வெற்றியைக் காணட்டுமே! இவர்கள் சிகிச்சைப் போட்டிக்கு அழைத்தால் நான் ஏற்கச் சித்தமாயுள்ளேன்! இவர்களின் அழைப்புக்குக் காத்திருப்பானேன்? நானே எல்லாவித மருத்துவ உலகத்துக்கும் சிகிச்சைப் போட்டிக்கு அழைப்பு விடுகிறேன்! நூற்றில் தொண்ணூறு நோயாளிகளை யோக சிகிச்சையால் பிழைக்க வைத்து விட்டால்— இம்முறையை ஒப்புக் கொள்வார்களா? விளம்பரம் செய்து, வசதி அளித்து, லட்சக் கணக்கில் மாளும் மாந்தர்களைக் காப்பதற்கு முன் வருவார்களா?

இவ்வளவு பேசிவிட்டு ஏதாவது ஒரு அத்தாட்சியாவது இங்கு தர வேண்டுமல்லவா? இதோ அந்த அத்தாட்சி:



பத்மாசனத்தில் ஸ்ரீ எதிராஜ்

ஸ்ரீ எதிராஜு என்பவர் கோலார் தங்கவயல் சுரங்கத்தில் ஒரு பாட்டாளி. இதன் பல சுரங்கங்களில் மாரிக் குப்பம் சுரங்கம் என்பது ஒன்று. எதிராஜை டி. பி. நோய் தொத்திக் கொண்டது. பாட்டாளியை ஏன் தொத்திக் கொள்ள வேண்டும்? டி. பி. கொடுங்கோல் மன்னனிடமிருந்து பதில் எப்படி வரும்? இந்த நோயின் வேகம் பாட்டாளி மேல் தான் அதிகம் வீசப்படும். பாட்டாளிகளில் பெரும் தொகுதி 'வறுமை' ராஜ்யப் பிரஜைகள்! போதுமான உணவு, பாதுகாப்பு உணவு, வசிக்க இட வசதி இல்லாது பொது ஆரோக்கியம் குறையும் பொழுது, டி. பி.க்கு அடிமையாவது நிச்சயம் என்பது உண்மை அனுபவம்! சுரங்க வேலையானது, தங்கத்தையோ நிலக்கரியையோ பாட்டாளிக்குச் சொந்தமாக்காது. டி. பி. காசம் இவைகளைத் தான், பாட்டாளிக்கு இனமாகத் தரும்! இவைகளையெல்லாம் டி. பி. வரும் காரணங்களை ஆராயும் பொழுது பார்ப்போம்.



சிரசாசனம்

இந்தப் பாட்டாளியும் ஏழை! இடமோ நான்கு மூங்கில்தட்டிகள் மறைத்த, மூங்கில் தட்டிக் கூரை கொண்ட, 'ஓட்டை நிவாஸ்!' தான். டி. பி. தாக்கிற்று. டி. பி. என்று அறியாமல் வேலூர் ஆஸ்பத்திரிக்கு ஆராய்ச்சிக்குச் சென்றார். அவர்கள் டி. பி. நோய் என்று 1951ம் வருஷத்தில் கூறி விட்டனர். ஊருக்குத் திரும்பினார். சிறிது, சிறிதாகச் செலவழித்து, 1952ம் வருஷத்துக்குள் சுமார் 230 ஊசிகள் ஏற்றிக் கொண்டார். இந்த ஊசிகளை ஏற்றியவாறே அவர் தொழிலையும் செய்து வந்தார்.

பெங்களூர் வந்தார். சானிடோரியத்தில் நுழைய இடமில்லை. இவருக்குக் கபத்தில் டி. பி. பூச்சியுள்ளது என்றும், இரண்டு நுரையீரலும் தீவிரமாகத் தாக்கப்பட்டுள்ளன என்றும், இனி ரணசிகிச்சைதான் செய்ய வேண்டுமென்றும் கூறிவிட்டனர்.

ஊசி மருந்துகளோடு எல்லா மருந்துகளையும் நிறுத்திவிட்டு, ஒரு மாத காலம் இங்கு யோகசாலையில் சேர்ந்து சிகிச்சை பெற்றார். இவருடைய தேக நிறையில் ஆறு இராத்தல் எடை உயர்ந்தது. வலிவும், பொது ஆரோக்கியமும் அதிகரித்தது. பொன் வயல் திரும்பினார். அங்கு எக்ஸ்ரே ஸ்க்ரீனிங் நடந்தது. அதில் ஒரு சுவாசப்பை முற்றிலும் டி. பி. யிலிருந்து குணமாகி விட்டதென்றும், இன்னொன்றில் குறைவாக இருப்பதாயும் சொன்னார்கள்.

இரண்டு வாரங்களுக்குப் பிறகு, ரத்த வாந்தி ஏற்படவே முற்றிலும் ஓய்வெடுத்து, 16 ஸ்ட்ரெப்டொமைசின் ஊசிகள் போட்டுக் கொண்டார். ஒரே தடவைக்கு மேல் ரத்த வாந்தி ஏற்படவில்லை. மறு மாதம் முதற் கொண்டு என்னிடமிருந்து ஆலோசனை ஏற்று நடக்க ஆரம்பித்தார். படிப்படியாக முழு தீவிரத்துடன் யோக சிகிச்சையைக் கையாண்டு ஒரு வருஷத்துக்குள் அவர் முற்றிலும் குணமடைந்து விட்டார்.

ஸ்ரீ எதிராஜு எடை தற்காலம் 125 இராத்தல். இவர் சரீரம் வலிவும் சதைத் திரளும் கொண்டுள்ளது. எதிராஜுவின் தற்காலத் தோற்றத்தை இந்தக் கட்டுரையில் இருக்கும் பத்மாசனம் படத்தில் காணலாம். இருபது நிமிஷங்களுக்கு மேல் சர்வாங்காசனமும், பத்து நிமிஷங்களுக்கு மேல் சிரசாசனமும் செய்யும் திறமை கொண்டுள்ளார். இவருடைய சிரசாசனத்தையும் இங்கே காணலாம்.

சென்ற மாதத்தில் திருமணம் செய்து கொண்டார். யோகப் பயிற்சிகளை விட்டு விடாமல் நித்ய கர்ம அனுஷ்டானமாகச் செய்து வருகிறார்.

கொடிய டி. பி. நோய்மேல் யோக முறையில் போர் தொடுத்து வெற்றி பெற்ற இவர் மனைவியுடன் நீடூழி காலம் வாழ்ந்து, டி. பி. நோயாளிகள் உயிரும், ஆரோக்கியமும் பெற்று இவரைப்போல் வாழ உதாரணமாக இருக்க வேண்டுகிறோம்.

இவருடைய வழியும், இவருடைய வெற்றியும், எல்லா டி. பி. நோயாளிகளுக்கும் கிட்ட வேண்டுமென்றே இந்த நோயின் ஆராய்ச்சி, சிகிச்சை முறையைத் தொடருகிறேன். **(தொடரும்)**

## வைடோமால்ட்

திரண்ட விடமின் சத்துக்களடங்கியது




விடமின்—ஏ
விடமின்—பி-1.
விடமின்—ஸி
விடமின்—டி.

நல்ல ருசியுள்ள, புஷ்டிதரக கூடிய மால்ட் எக்ஸ்ட்ராக்ட் அடிப்படையில் மேற்கண்ட அத்யாவசியமான விடமின் சத்துக்கள் அடங்கியது. போஷாக்கு குறைவானவர்கள், நோயினின்றும் தேறுபவர்கள், கர்ப்பிணிகள் மற்றும் பாலூட்டும் தாய்மார்களுக்கு மிக உகந்தது என சிபார்சு செய்யப்படுகிறது.




தயாரிப்பவர்கள் :

**தி மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேடரி லிட்.**

மல்லேஸ்வரம், பெங்களூர் - 3.

விற்பனை டிப்போ : 35/37, தம்பு செட்டி தெரு, சென்னை - 1.

MITL-4 ATM

---

# பாதத்திலுள்ள புண்கள் நான்கு நாட்களிலேயே தகருகின்றன

### குத்து வலியும் நமைச்சலும் 7 நிமிஷங்களில் நிறுத்தப்படுகிறது



வெறுப்பு தரும்படி பாதங்களில் அரிப்பு ஏற்படுகிறதா. பாதங்களில் ஏற்படும் வெடிப்புகளினால் தோல் உரிகிறதா. பாதங்களிலும், கால் விரல்களுக்கு இடையிலும் கொப்பளங்கள் உண்டாகி, அவைகள் உடைவதினால் வரும் அசுத்த நீரினால் புதிய கொப்பளங்கள் உண்டாகின்றனவா. பாதங்களின் புண்களிலிருந்து ரத்தக் கசிவு ஏற்படுகிறதா. இந்த உபாதைகளுக்கு மூலகாரணம் சருமத்திலுள்ள வியாதிக் கிருமிகளே. அவைகளை அடியோடு அழிக்காவிடில் உபாதைகளினின்று விடுதலையடைய முடியாது.

சாதாரண களிம்புகளும், தைலங்களும் அதிக பலனை அளிப்பதில்லை. ஏனெனில் அவை உபாதைக்கு மூல காரணத்தை அழிப்பதில்லை. அதிர்ஷ்ட வசமாக இந்த உபாதைகளிலிருந்து விடுதலையடைய, ஒரு பிரபல ஆங்கில சரும வைத்திய நிபுணரால் கண்டுபிடிக்கப்பட்ட நிக்ஸோடெர்ம் (Nixoderm) உள்ளது. இது மூன்று நிச்சயமான வழிகளில் குணமளிக்கிறது. (1) பாதங்களில் உபாதைக்குக் காரணமான கிருமிகளை அழிக்கிறது. (2) ஏழு நிமிஷத்தில் நமைச்சலைத் தடுத்து, சருமத்துக்குக் குளுமை தருகிறது. (3) சருமத்தை சுத்தமாக்கி, பட்டுப்போல் வழவழப்பாகச் செய்கிறது.

### பரிசீலனைக்கு உத்தரவாதம்

மருந்து வியாபாரியிடமிருந்து நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்கி இன்று இரவு உபயோகித்து, அதன் அற்புத குணங்களை மறு நாள் காலை கவனியுங்கள். நான்கு தினங்களிலேயே உபாதைகளுக்குக் காரணமான வியாதிக் கிருமிகளை அழித்துச் சருமத்தைச் சுத்தமாகவும் ஆரோக்கியமுள்ளதாகவும் செய்கிறது. சரும உபாதைகளிலிருந்து பூரண பலனை அடைந்து திருப்தி பெற, தொடர்ந்து மூன்று நாட்கள் மருந்தை உபயோகிக்கவும். அந்த ஒரு வார முடிவில் உங்களுக்கு முழு திருப்தி ஏற்படாவிடில் அதன் காலி பாக்கெட்டைத் திருப்பி அனுப்பினால் அதன் விலை வாபஸ் செய்யப்படும். அதற்கு அளிக்கப்படும் உத்தரவாதமே உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது.

# அசட்டுக் கேள்விகள்



"இன்ஸ்பெக்டர் ஸார்! பஸ்ஸில் இடம் கிடைக்குமா?"



"என்னப்பா, வேணும் உனக்கு?"



"என்னய்யா இப்படி ஓடிவரே? என்ன விஷயம்?"



"விசிறி போடணுமா, ஸார்?"



"என்னங்க, எட்டரை மணி வண்டி எத்தனை மணிக்கு வரும்?"



பல் டாக்டர்:—என்ன ஸார், வலிக்கிறதா?"

தேவியின் கடிதம்

# வம்புப் பேச்சு வேண்டாம்

வசுமதி ராமசாமி

அன்புள்ள சுஜாதா,

'பெண் கல்வி உலகில்' அனேக சேவைகளெல்லாம் புரிந்து பெண் குலத்தின் பெரும் மதிப்பைப் பெற்ற ஒரு அம்மாளிடம் நான் சில வருஷங்களுக்கு முன் பேசிக் கொண்டிருந்தேன். பேச்சுவாக்கில் தம்முடைய அனுபவத்தில் ஒன்றைக்கூறினார். ''நான் ஒரு சகோதரியைப் பற்றியும் வம்பு பேசுவதில்லையென விரதம் வைத்துக்கொண்டிருக்கிறேன்'' என்று சொன்னார். எனக்கு அதன் உயர்வை உணர முடிந்தது. நாமும் கூடிய மட்டும் அந்த முயற்சியைச் செய்யலாமென நினைத்தேன்.

உத்தர ராமாயணத்தையே நான் நம்புவதில்லை. லோக மாதாவுக்கு ஒரு அபக்கியாதி. அதை ராமர் கேட்டார் என்பதே தவறான விஷயம். ஆயினும் கதையாகப் பாவித்தோமானால் நா அடக்கமின்றிப் பேசும் பேச்சின் பெருங் குற்றம் மனத்தை எவ்வளவு கஷ்டப் படுத்துகிறது என்பது தெரியும்.

சமீபத்தில் அயல் நாடுகளுக்குச் சென்று திரும்பிய என் அருமைச் சிநேகிதி அங்குள்ள அதிசயங்களைப் பற்றிச் சொன்னார். வியாபாரம், வாழ்க்கைத் தரம், குழந்தை வளர்ப்பு, பெண் கல்வி முதலிய அநேக விஷயங்களைப் பற்றி அழகாக எடுத்துச் சொன்னார். அங்கு பெண்கள் இடை விடாமல் உழைப்பதால், வம்பு பேச அவர்களுக்கு அவகாசமே இல்லை. அதுவே பழக்கமாகி விட்டது. நம்முடைய நாட்டிலும் வம்பின் கொடுமை போக வேண்டுமென்று தெரிவித்தார். அதனால் நாள் முழுவதும் வேலை செய்வதில் வருமானம் கிடைப்பதுடன், வம்புப்பேச்சுக்கும் இடமில்லாமல் போகும் நன்மை உண்டாகிறது.



ரகு வம்சத்து அரசர்களை வர்ணிக்கும்பொழுது 'சத்தியாய மிதபாஷிணாம்' என்று காளிதாஸன் சொல்லுகிறான். சத்தியம் என்றால் பொய் சொல்லாதது மட்டுமல்ல. பிறரைப் பற்றி அவதூறு பேசுவதும் அசத்தியத்தைவிட மிகவும் இழிவான செயல்தான்.

வம்புக்குத் தான் அங்கு பொருள். ஏனெனில் வம்பு சமாசாரத்தில் நூற்றுக்கு ஒரு பங்கு உண்மை இருக்கலாம். அல்லது அதுகூட இல்லாமலும் இருக்கலாம் அல்லவா?

பேச்சு ருசியில் தவறான பழக்கத்தில் மிகவும் லேசாக ஒரு பெண்ணைப் பற்றிப் பேசினதில் அந்தப் பெண்ணுடைய எதிர்காலம் இருள் சூழ்ந்ததாக ஆகி விட்டது. கேவலம், வம்பு பேசுவதிலுள்ள விபரீதத் தன்மையால் பிறருடைய நிலை எப்படி மாறுகிறதென்று அறிய வேண்டுமல்லவா? பொறுப்பற்ற பேச்சுக்கள் சமூகத்துக்குச் செய்யும் மகத்தான குற்றமாகும்.

முன் காலத்தில் குளத்தங்கரை வம்பு, கோவில் வம்பு என்றெல்லாம் இருந்தன. இன்று நவநாகரிக உலகில் வம்பு டெலிபோனிலாவது பேசப்படுகிறது.

ஒரு கல்யாணம் நிச்சயமாகி இருந்தது. ஒரு அம்மாள் 'அந்தப் பெண்ணையா நிச்சயித்திருக்கிறீர்கள்? சரிதான்! இனிமேல் நான் ஒன்றும் சொல்லக் கூடாது' என்று ஒரு பொடி வைத்துப் பேசி விட்டார். நடுவில் ஒரு சின்னச் சொல்லில் கல்யாணமே நின்று விட்டது.

காற்றை விட வேகமானது மனமென்று நமக்குத் தெரியும். ஆனால் அந்த மனத்தைவிட வேகமானது வம்பு. நெருப்பை விட எரிச்சலுடையது வம்பு. அறியாமையால் மட்டுமல்ல, பொறுப்பற்ற உணர்ச்சியோடு நாவடக்கமின்றிப் பேசும் பழக்கமும் ஓரளவு வம்பைப் பிறப்பிக்கிறது.

ஆண்கள் வம்பு பேசுவதில்லையாவென நீ கேட்கலாம். நான் எழுதுவதெல்லாம் நம் சகோதரிகளுக்குத்தான். நம் நாட்டில் பெண்கள் பேசும் தெய்வங்களாக மதிக்கப்பட்டு வந்திருக்கிறார்கள். நம்மை நாம் இன்னும் உயர்த்திக் கொள்ள வழி இருக்கிறது. அதற்கு அவசியமான குண விசேஷங்களை இயற்கை நமக்கு அளித்திருக்கிறது. நம்மைக் கண்டு அஞ்சலி செய்யும் வண்ணம் வானளாவ உயர்ந்து வாழ நம்மால் சாத்தியம், சுஜாதா!

இப்படிக்கு,

**பூமாதேவி**

# சைபால்

## CIBOL

வெட்டுக்காயம், சொறி சிரங்கு, வேனல்கட்டி,
தீப்பட்ட புண், கரப்பான், முகப்பரு, சேத்துப்புண்
முதலிய வியாதிகளைப் போக்குவதில் கைகண்ட களிம்பு

தயாரிப்பவர்கள்

தி சௌத் இந்தியன் மான்யுபாக்சரிங் கம்பெனி, மதுரை

---



உங்கள் வீட்டிலுள்ள செம்பு
பித்தளையிலும் செய்யப்பட்ட
ஒவ்வொரு சாமானையும்
சுத்தமாகவும் தகுந்த பளப
ளப்புடனும் வைத்திருப்பது
அவசியம். இந்தப் பளபளப்பு
த்தான் அறையின் அழகை
அதிகப்படுத்துகிறது. அவை
களுக்கு இந்த பிராஸோ பா
லிஷினால் பளபளப்பை, மிகச்
சிக்கனமாகவும் சுலபமாக
வும், விரைவாகவும் நீங்கள்
அளிக்க முடியும். உங்கள் வீட்
டில் இருக்கும் நிரந்தர பிரா
ஸோ பளபளப்பைக் கண்டு
நீங்கள் பெருமைப்படுவீர்கள்

பிராஸோ
மெட்டல் பாலிஷ்




திரவம் அல்லது பேஸ்ட்

---



இந்தியாவிலே பெரும் அளவில்

## சீட்டுக் கட்டுகள்

தயாரிப்பவர்கள்

*

எல்லோரும் வாங்கும் சக்திக்கு ஏற்றவாறு
பற்பல ரகங்களில் அநேகவித கவர்ச்சிகர
மான அழகிய டிஸைன்களில் கிடைக்கும்

மாதிரி வேண்டுவோர் எழுதவும்

**Popular Fine Litho Works, Suryoday Mills Compound, Tardeo, Bombay-7**

# when you *must* look your loveliest

When it's glamour you want and you must look your loveliest . . . or when you need the assurance of all-day complexion perfection, Pan-Cake Make-Up by Max Factor Hollywood is your answer.

Used by Hollywood's most beautiful stars—both on and off the screen—Pan-Cake Make-Up gives you a flawless, naturally youthful-looking complexion that everyone will admire . . . and envy. And it will last far longer, too, without constant touch-up.

Enriched with Lanolin, it can't dry, won't harm your skin. It is the perfect "cover-up" for uneven skin tones, embarrassing shadows and minor skin imperfections.

Ask for Max Factor's Pan-Cake Make-Up, today, at your favorite cosmetics stores . . . and be sure you will always look your loveliest.

**PAN-CAKE***

***MAKE-UP by***

**MAX FACTOR**

**HOLLYWOOD**

DEBORAH KERR

*instantly . . . a light natural-looking complexion.*

SOLE AGENTS IN INDIA: ORIENT COSMETICS PRIVATE LTD., MADRAS, BOMBAY, CALCUTTA

# காணாத  பேட்டி

### விடாக்கண்டர்

அன்று நான் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனை அடைந்த போது அங்கு ஒரே அமர்க்களமா யிருந்தது. இத்தனைக்கும் நான் என் வெளியூர்ப் பயணத்தைப் பற்றி ஒருவருக்கும் சொல்லவில்லை. ஆனாலும் எப்படியோ ரயில் நிலையத்தில் கூட்டம் சேர்ந்து விட்டது.

எல்லாரும் ஓடி வந்து எனக்கு மாலை போடப் போகும் நல்ல தருணத்தில் அந்தப் பொல்லாத கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ் வந்து காரியத்தைக் கெடுத்து விட்டது!

அந்த ரயிலில்தான் பாரதத்தின் ஜனாதிபதி பாபு ராஜேந்திர பிரசாத் சென்னைக்கு விஜயம் செய்தார். ஆகவே, எனக்குக் கிடைப்பதற்கிருந்த மாலை மரியாதைகள் அனைத்தும் அவருக்குப் போய்ச் சேர்ந்துவிட்டன!

சென்னை சர்க்காரின் அழைப்புக்கிணங்க ராஜன்பாபு இவ்வருஷ சுதந்திரத் திருநாளை முன்விட்டு மூன்று நாட்கள் முன்னதாகவே விஜயம் செய்து விட்டார்!

ராஜன் பாபுவைக் கண்டதும் நான் "தங்களுக்கு என் சுதந்திர தினப் பரிசுகள்" என்று கூறி அவசரமாகச் சட்டைப் பையில் கையை விட்டேன்.

"குத்து! குத்து" என்றார் ஜனாதிபதி.

சுற்றியிருந்தவர்கள் ஒன்றும் புரியாமல் "யாரைக் குத்தச் சொல்கிறார்?" என்று திகைத்துப் போனார்கள். நான் ஒரு சிறு காகித மூவர்ணக் கொடியையும், ரோஜா புஷ்பத்தையும் அவர் ஷெர்வானி சட்டையில் குத்திவிட்டு, **"வாழ்க ஜனாதிபதி! வாழ்க ராஜன் பாபு! வாழ்க சுதந்திரம்!"** என்று வாழ்த்திக் கொண்டே அப்பால் நகர்ந்தேன்.

"விடாக்கண்டரே! எங்கே புறப்பட்டு விட்டீர்?" என்று கேட்டார் குறுக்கே வந்த தொழில் மந்திரி கனம் பக்தவத்சலம்.

"ஓ! தாங்களா? வணக்கம். வெளிதேசப் பிரயாணமெல்லாம் எப்படி இருந்தது?" என்று விசாரித்தேன்.

"ரொம்ப ரொம்ப ஜோராயிருந்தது. சர்வதேசத் தொழில் ஸ்தாபன மகாநாடு அமர்க்களமாக நடந்தது" என்றார்.

"அங்கெல்லாம் சர்க்கார் எம்மாதிரி நடக்கிறது?"

"ரொம்பச் சுறுசுறுப்பா யிருக்கிறார்கள்."

"இங்கே சென்னையில்தான் எல்லாம் ஒரே ஆமை வேகத்தில் இருக்கின்றன" என்றேன்.

"ஏன்? சென்னைக்கு என்ன?" என்று படபடப்பாகக் கேட்டார்.

"ஒன்றுமில்லை; மக்களின் ஜீவாதாரமான அரிசியின் விலை நாலு மாதமாக அப்படியே இறங்காமல் இருக்கிறது. பஸ் போக்குவரத்து நிலைமையும் சீர்ப்படவில்லை. ஏழை சர்க்கார் குமாஸ்தாக்களான என். ஜி. ஓ.க்களின் நிலைமையும் 'பழைய கந்தனே கந்த'னாக இருந்து வருகிறது. இதற்கெல்லாம் வழியில்லையா என்று கேட்டால் சர்க்கார் பிரச்னைகளை அக்கறையுடன் கவனித்து வருவதாகச் சொல்கிறீர்கள். இந்த நிலைமை முற்றினால் அப்புறம் மக்களும் உங்களைக் கவனிக்க ஆரம்பித்துவிடுவார்களே!" என்றேன்.

"என்ன, அப்படிச் சொல்கிறாய்? அவர்கள் எப்படி எங்களைக் கவனிக்க முடியும்?" என்று வியப்புடன் கேட்டார்.

"தேர்தலில்!" என்றேன் நான்.

"பொல்லாத விடாக்கண்டரே! நீர் போய் வாரும். உம்மை நான் கவனித்துக் கொள்கிறேன்...ஆமாம், இப்போது எங்கே புறப்பட்டீர்?" என்றார் திரு பக்தவத்சலம்.

"இப்படி பம்பாய், கெய்ரோ, லண்டன் வரை போய்க் கவனித்து விட்டு வரலாம் என்று கிளம்பினேன்" என்றேன்.

"எனக்கு" என்றார் எஸ். கே. பட்டீல்.

"இல்லை, எனக்கு" என்றார் மொரார்ஜி தேசாய்.

"இல்லை எனக்கு" என்றார் தேசமுக்.

"இல்லவே இல்லை; எனக்குத்தான்" என்றார் சங்கரராவ் தேவ்.

"உங்கள் எல்லாருக்குமே இல்லை; எனக்குத்தான்" என்று ஒரே போடாகப் போட்டார் நேருஜி.

இப்படி 'எனக்கு உனக்கு' என்று பம்பாயை எல்லாருமாகச் சேர்ந்து சில காலம் பந்தாடிக் கொண்டிருந்தார்கள் அல்லவா?

இப்போது எல்லோரும் ஒன்று கூடி இருமொழிகளடங்கிய ஒரு பெரிய பம்பாய் ராஜ்யத்தை ஸ்தாபித்து "பம்பாய் நமதே!" ஆக்கிக் கொண்டு விட்டார்கள்.

பம்பாய் நகரம் நான் போன சமயம் ஒரே அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. பம்பாய்த் தீர்மானத்தின் எதிரொலி விண்ணகத்தில் கேட்டிருக்க வேண்டும். வருண தேவனின் ஆனந்தம் பம்பாயில் ஒரே மழையாகக் கொட்டி வெள்ளக் காடாகி யிருந்தது. நான் 'படே பம்பாய் ராஜ்யம் ஜிந்தாபாத்!' என்று வாழ்த்திவிட்டு ஆனந்தக் கடலிலிருந்து அரபிக் கடலுக்குப் பாய்ந்தேன். அரபிக் கடலிலிருந்து செங்கடலுக்குத் தாவினேன். செங்கடலிலிருந்து மத்திய தரைக் கடலை நோக்கிப் பறந்தேன்.

இடையில் பிரசித்தி பெற்ற சூயஸ் கால்வாய் குறுக்கிட்டது. என்னைக் கண்டதும் "வந்தது வந்தீர்கள்; எங்கள் தலைவர் நாஸரையும்தான் பார்த்து விட்டுப் போங்களேன்!" என்றது சூயஸ்.

"ஓ எஸ்!" என்று பதில் கூறிவிட்டு கெய்ரோவுக்குப் போய், "நாஸர் ஸார், நமஸ்காரம்!" என்றேன்.

"ஓ! விடாக்கண்டரா? எப்போது வந்தீர்? எப்படி வந்தீர்?"

"இப்போது தான் வந்தேன். தங்கள் எகிப்து நாட்டின் சொந்தக் கால்வாயான சர்வதேசக் கால்வாய் வழியாக வந்தேன்."

"சூயஸ் கால்வாய் எங்களுக்குத்தானே சொந்தம்?" என்றார் நாஸர்.



சங்கீதத்தைப் பற்றி நினைக்கும் போது ரஸிகரஞ்சனி சபையையும், அதன் ரசிகர்களையும் நினைக்காமல் இருக்க முடியாது. ரசிகரஞ்சனி சபையில் பாடினால்தான் திருப்தியாக இருக்கிறது என்று பெருமையடையாத சங்கீத வித்வான்களும் இருக்க முடியாது. இவ்வாறு சங்கீதத்தின் நாத்தை உயர்த்திச் சங்கீத உலகில் பெரும்புகழுடன் விளங்கிவரும் மயிலாப்பூர் ரஸிகரஞ்சனி சபையின் வெள்ளி விழா சென்ற ஆரும் தேதி சிறப்பாக நடைபெற்றது. விழாவை இந்திய சர்க்கார் கைத்தொழில் மந்திரியும் சிறந்த சங்கீத ரசிகருமான ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் ஆரம்பித்து வைத்தார். விழாவுக்கு டாக்டர் ஸி. பி. ராமசாமி ஐயர் தலைமை வகித்தார். ரஸிகரஞ்சனி சபைத் தலைவரும், சுப்ரீம் கோர்ட் நீதிபதியுமான ஸ்ரீ டி. எல். வெங்கட்ராமய்யர் விழாத் தலைவர்களையும், சபையோர்களையும் வரவேற்றுப் பேசி, சபை கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாகச் சங்கீதத்துக்குச் செய்துள்ள சாதனைகளை விவரித்தார். இன்னும் பல கலைஞர்கள் சபையின் சேவைகளைப் பாராட்டிப் பேசினர். ஸ்ரீ எம். சுப்பராய அய்யர் வந்தனோபசாரம் கூறிய பிறகு, ஸ்ரீமதி பிருந்தா, ஸ்ரீமதி முக்தா கோஷ்டியினரின் இன்னிசை நிகழ்ந்தது. பொன் விழாவை ஆரம்பித்து வைத்து ஸ்ரீ டி. டி. கே. பேசுவதைப் படத்தில் காணலாம்.

---

''ஆமாம். யார் இல்லையென்று சொன்னது?''

''கால்வாய் சர்வதேசக் கம்பெனிக்குச் சொந்தமாம்! அந்த உரிமையை எகிப்து முன் கூட்டியே பறித்து விட்டதாம்! நான் செய்ததில் தவறு என்ன?'' என்று கேட்டார் நாஸர்.

''நீங்கள் செய்ததிலும் தவறு இல்லை. அவர்கள் சொல்வதிலும் தப்பு இல்லை. கால்வாய் உங்களுக்குச் சொந்தம். அந்தக் கால்வாயில் போய் வரும் உரிமை எல்லாத் தேசங்களுக்கும் சொந்தம்'' என்றேன் நான்.

''யார் வேண்டுமானாலும் போகட்டும், வரட்டும். கால்வாயின் உரிமைதான் எனக்கு வேண்டும்'' என்றார் நாஸர்.

''விடக்கூடாது!''

''எதை விடக்கூடாது?''

''அந்த உரிமையைத்தான் விடக்கூடாது.''

''பேஷ், அப்படிச் சொல்!'' என்று கூறி என் முதுகில் ஓங்கி ஒரு ஷொட்டு வைத்தார் கர்னல் நாஸர்.

''அந்த உரிமையை என்னிடமிருந்து மிரட்டி வாங்கி விட முடியாது, ஜாக்கிரதை!.. ஆமாம்; 'இருபத்து நாலு தேசங்களின் பிரதிநிதிகளை அழைத்து லண்டனில் கூட்டி என்ன தீர்மானம் செய்யப் போகிறார்களாம்?''

''சொல்லட்டுமா?''

''சொல், பார்க்கலாம்?''

''மற்ற இருபத்துமூன்று நாட்டுப் பிரதிநிதிகளும் வருவார்கள். 'மாப்பிள்ளை இல்லாமல் கலியாணமா?' என்று கேட்பார்கள். எகிப்தைக் கலந்து பேசாமல் எந்த முடிவுக்கும் வர முடியாது என்று தீர்மானம் செய்வார்கள்'' என்றேன்.

''பலே! விடாக்கண்டரே, பலே! நான் என்ன பதில் சொல்வேன்? அதையும் சொல்லும் பார்க்கலாம்!''

''முதலில் சூஎஸ்ஸுக்கு அருகில் அனுப்பியுள்ள படைகளை வாபஸ் வாங்குங்கள். பிறகு சமாதானம் பேசலாம்என்பீர்கள்'' என்றேன்.

''சபாஷ்!'' என்று கூறி நாஸர் என் முதுகில் மற்றொரு பலமான ஷொட்டு வைத்து விட்டார்.

''நாஸர் ஸார்! முதுகு எனக்குச் சொந்தம். அதைத் தாங்கள் தங்களுடைய சொத்தாக்கி விட முடியாது'' என்று எச்சரித்து விட்டு லண்டனைநோக்கிப் பாய்ந்தேன்.

அங்கே எனக்கு முன்னால் வேகமாகப் போய்க்கொண்டிருந்த ஸ்ரீ வி. கே. கிருஷ்ண மேனன் ''விடாக்கண்டரே, நீர் ஊருக்குத் திரும்பிப் போகலாம். லண்டன் மகாநாட்டை நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்று கூறினார்.

'ரொம்ப நல்லதாய்ப் போயிற்று! சுதந்திர தினத்தைச் சொந்த நாட்டிலேயே கொண்டாடி மகிழலாம்' என்று எண்ணிச் சந்தோஷத்துடன் சென்னைக்குத் திரும்பினேன்.

# கோவை தொழிற் கல்லூரி



கோவை பீளமேட்டில் ஸ்ரீ வி. ரங்கசாமி நாயுடு கல்வி நிர்வாகக் குழுவினர் ''கோயமுத்தூர் தொழில் நுணுக்கக் கல்லூரி'' என்ற பெயரில் புதிய இன்ஜினியரிங் கல்லூரி ஒன்றைத் துவக்கி இருக்கின்றனர். சென்ற ஆறும் தேதி இந்தக் கல்லூரியை இந்திய சர்க்கார் தொழில் மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் ஆரம்பித்து வைத்தார். கல்லூரி துவக்கவிழா பற்றிய விவரங்கள் அடங்கிய கட்டுரை அடுத்த இதழில் வெளியாகிறது.





# சேலம் செழிக்கிறது!

எஸ்.வி.எஸ்.

**கா**லம் ரொம்பவும் மாறித்தான் போய் விட்டது. ஒரு காலத்தில் ராஜாக்களின் தயவை எதிர்பார்த்து மக்கள் வாழ்ந்து வந்தார்கள். இப்பொழுது ராஜாக்கள் இருக்கிற இடம் தெரியவில்லை. மந்திரிகளின் ஆட்சி தான் நடைபெறுகிறது. மந்திரிகளின் தயவு தான் வேண்டியிருக்கிறது!

அதிலும் ஐந்தாண்டு திட்டங்கள் வகுத்துக் கோடிக்கணக்கான ரூபாய்கள் வாரி வழங்கும் திட்ட மந்திரி என்றால் இந்நாட்களில் எவ்வளவு செல்வாக்கு உண்டு என்று சுலபமாக ஊகிக்கலாம். ஏன், பிரதம மந்திரிக்கு இல்லாத மதிப்பு இந்தத் திட்ட மந்திரிகளுக்கு ஏற்பட்டு விடுகிறது. அதனால் மத்திய சர்க்காரில் உதவித் திட்ட மந்திரி ஸ்ரீ சியாம நந்தன் மிச்ரா மைசூர் வரை வரப்போகிறார் என்று கேள்விப்பட்ட நமது சேலம் ஜில்லா பார்லிமெண்ட் அங்கத்தினர் ஸ்ரீ வி. ஆர். நரசிம்மன் அவர்கள் மைசூரை ஒட்டினாற் போலுள்ள தமது தொகுதியையும் வந்து பார்வையிடும்படி கோரினார்!

திட்ட மந்திரியை 'வந்து பாருங்கள்' என்று சொன்னால் பொருட் காட்சியைப் பார்ப்பது போல் பார்த்து விட்டுப் போங்கள் என்று சொன்னதாகவா அர்த்தம்? அந்தப் "பாருங்கள்" என்ற சொல்லுக்கு, "உங்கள் திட்டத்தில், நமது தொகுதிக்கு இன்னும் கொஞ்சம் நிதி ஒதுக்குங்கள்!" என்றல்லவா பொருள். அப்படியானால் எந்த மந்திரி துணிந்து வருவார்? "ஐயோ, பணமா? இல்லையே!" என்றல்லவா கை விரிப்பார். ஆனால் ஸ்ரீ வி. ஆர். நரசிம்மன் தில்லியில் மக்கள் சபையில் தமது தொகுதி மக்களின் நலன்களை உத்தேசித்து ரயில்வே பட்ஜெட், நீர்த்தேக்க பட்ஜெட் முதலியவைகளின் போது போட்ட சண்டைகளைப் பார்த்துவிட்டு, 'இந்த மனிதர் உண்மையிலேயே தமது தொகுதி மக்களுக்கு என்ன செய்திருக்கிறார் பார்ப்போம்' என்று தான் ஸ்ரீ சியாமநந்தன் மிச்ரா வந்தார்.

பங்களூரை விட்டு 3-ம் தேதி விடியற்காலையில் புறப்பட்டோம். பங்களூர் தொழில் பிரமுகர் திரு சாரங்கபாணி முதலியார் அவர்களே, தமது காரில் உதவி மந்திரி சியாமநந்தன் மிச்ரா, திரு வி. ஆர். நரசிம்மன் முதலியோர்களையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டார்.

பங்களூரை விட்டு இருபத்தைந்தாவது மைலில் சேலம் எல்லை. சேலம் ஜில்லா எல்லையிலுள்ள ஹோசூர் காங்கிரஸ் கமிட்டியைச் சேர்ந்தவர்களும் சேலம் ஜில்லா உதவி கலெக்டர் அவர்களும் மந்திரியை மலர் மாலை அணிவித்து வரவேற்றனர்.

ஹோசூர் இரண்டு விஷயங்களுக்குப் பெயர் பெற்றது. அங்கு தமது ராஜ்யத்திலேயே மிகப் பெரிய கால்நடைப் பண்ணை யிருக்கிறது. உயர்ந்த ரக ஜாதி மாடுகளைச் சிருஷ்டிப்பதே அப் பண்ணையின் முக்கிய அலுவல். "உயர்ந்த ஜாதி பசுமாட்டை மட்ட ஜாதி தீண்டிவிடாதபடி பார்த்துக் கொள்கிறோம்" என்று அதிகாரி கூறினார். "மனித ஜாதியை விட்டுச் சென்ற ஜாதி வித்தியாசம் இங்கு வந்து சேர்ந்து விட்டது போலிருக்கிறது!" என்று ஒரு நண்பர் சொன்னதும் எல்லோரும் 'கொல்'லென்று சிரித்து விட்டார்கள்.

ஹோசூரில் மற்றொரு முக்கியமான விஷயம் பட்டுப் பூச்சி வளர்ப்புச்சாலை. இதையும் சர்க்கார்தான் நடத்தி வருகிறார்கள். இங்கும் உயர்ரகப் பட்டுப் பூச்சிகளை வளர்த்து அக்கம் பக்கமுள்ள கிராமவாசிகளுக்குக் கொடுத்து வருகிறார்கள். ஹோசூரில் பட்டுப்பூச்சி வளர்ப்பும், கக்கூன்கள் (பட்டுப் பூச்சிகள் பட்டு நாளினால் செய்துகொள்ளும் கூடுகள்) வியாபாரமும் குடிசைத் தொழிலாக இருந்து வருகின்றன. இங்கு உற்பத்தியாகும் கக்கூன்களை இழை யெடுப்பதற்குக் கொள்ளேகாலுக்கு இதுகாறும் அனுப்பி வந்தார்கள். புது ராஜ்ய ஏற்பாட்டில் கொள்ளேகால் மைசூர் ராஜ்யத்தோடு இணைந்துவிடும், அப்படி இணைந்து விட்டால் ஹோசூரிலுள்ள ஏழை பட்டுப் பூச்சி வளர்ப்பாளர்களுக்குப் பிழைப்பு போய்விடும். நூற்றுக்கணக்கான பேர் தங்கள் கக்கூன்களை எங்கு கொண்டு சென்று விற்பார்கள்? அவர்களுடைய நிலை மிகப் பரிதாபம். அன்று ஹோசூர் பஞ்சாயத்து போர்டு, மந்திரி அவர்களுக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தபோது, சேலம் ஜில்லா பட்டு உற்பத்தியாளர் சங்கக் காரியதரிசி தேஸாய் என். வெங்கடகிருஷ்ணன் அவர்கள் தங்களுக்கு ஏற்படப் போகும் அவல நிலையை எடுத்து விளக்கினார். அதைக் கேட்ட பின்னர் தட்சிணப் பிரதேசம் ஏற்படுவது எவ்வளவு அவசியம் என்பதுதான் மீண்டும் ஊர்ஜிதமாயிற்று!

பாரத தேசம் சுதந்திரமடைந்து விட்டது. உண்மை. எழுத்தறிவு உள்ளவர்கள் சுதந்திரத்தின் பிரயோசனங்களை நன்கு அறிவார்கள். தேசத்தில் எத்தனை இடங்களில் பெரும் பெருந் திட்டங்கள் நிறைவேற்றி வருகிறார்கள் என்பதைப் பத்திரிகைகள் மூலமாக அறிந்து கொள்ள முடியும். ஆனால் பட்டிதொட்டி கிராமங்களிலுள்ள படிப்பு வாசனையற்ற பரம ஏழைகளும், "சுதந்திரம் வந்துவிட்டது. புது விழிப்பு ஏற்பட்டிருக்கிறது. புது நன்மை விளையப்போகிறது. நாடு சுபிட்சமடையப் போகிறது!" என்ற உணர்ச்சியைப் பெற என்ன வழி என்று சர்க்கார் யோசித்தார்கள். அதன்மேல் தான் கம்யூனிட்டி பிராஜக்ட், நேஷனல் எக்ஸ்டென்ஷன் ஸர்விஸ், லோக்கல் டெவலப்மெண்ட் ஸ்கீம் என்ற பல தலைப்புக்களில் பாரத சர்க்கார் தமது தேசத்திலுள்ள கிராமங்கள் அபிவிருத்தி அடைவதற்கென்றே கோடிக் கணக்கான ரூபாய்களைச் செலவழித்து வருகிறார்கள்.

சர்க்கார் செலவழித்து ஒரு பள்ளிக்கூடம் கட்டி விட்டால், மக்களுக்கு அது ஏதோ 'தர்ம சொத்து' போன்ற உணர்ச்சிதான்

அதைப் பற்றி ஏற்படுகிறது. சர்க்கார் செலவழிக்கும் பணம் தாங்கள் பல வரிகள் மூலமாகவும், கடனாகவும் கொடுத்தது என்ற உணர்ச்சியே மக்களுக்கு ஏற்படுவதில்லை. தங்கள் முயற்சியின் பயனாக எழுப்பப்பட்டது என்ற பெருமித உணர்ச்சி ஏற்பட வேண்டுமென்று ஒரு விதி ஏற்படுத்தி யிருக்கிறார்கள். அதாவது ஒரு கிராமத்துக்குச் செலவு ஆகும் தொகையில் பாதி சர்க்காரும் பாதி கிராமத்தார்களும் வழங்க வேண்டும். ஆனால் சேலம் ஜில்லாவிலுள்ள கிராம வாசிகள் பரம ஏழைகள். அவர்களால் கிராமத்துக்கு ஆகும் செலவில் பாதித் தொகையைத் தர முடியாது. அதனால் சேலம் ஜில்லா போர்டு கால் பகுதியும் மக்கள் கால் பகுதியும் வழங்குகின்றனர். இம் முறையில், சேலம் ஜில்லாவில் பல கிராமங்களில் ஆரம்பப் பாடசாலைகள், உயர்நிலைப் பாடசாலைகள், தெரு விளக்குகள், சாலைகள், குடிதண்ணீர்க் குழாய்கள் ஆகிய பல வசதிகள் ஏற்பட்டிருக்கின்றன. இப்படிப் பல சௌகரியங்கள் அடைந்த கிராம வாசிகள் எல்லாம் சுதந்திரத்தின் முழுப் பயனை உணர்ந்த ஆனந்த புருஷர்களாகக் காணப்பட்டார்கள்.

ரயிலும் பஸ்ஸும் எட்டாத பல கிராமங்களைப் பார்வையிட்டோம். சாமந்தமலை, மோரனஹள்ளி, மகராஜகடை முதலிய கிராமங்களில் பள்ளிக்கூடம் முதலிய வசதிகள் ஏற்பட்டிருக்கின்றன. அதன் காரணமாக மக்கள் சந்தோஷமாகக் காணப்பட்டார்கள்.

அப்படியேதான் சேலத்தில் உடையபட்டி, மாலூர் முதலிய கிராமங்களில் மக்கள் பல வசதிகள் பெற்றுச் சந்தோஷமாக இருப்பதைப் பார்த்தோம்.

ஆயினும் சேலத்தில் மக்களுடைய மகிழ்ச்சிக்கிடையே ஒருவித சோகமும் பயமும் இழையோடிக் கொண்டிருந்தன. சேலம் ஜில்லா நீர்ப்பாசன வசதியற்ற ஜில்லாவாகையால் அங்கு பெரும்பான்மையான ஏழை மக்கள் கைத்தறியையே நம்பி வாழ்கிறார்கள். சர்க்காரின் இயந்திரத் தறிக் கொள்கையும் நெசவாளிகள் தங்கள் பெயர்களை விரைவில் பதிவு செய்து கொள்ள வேண்டும். இல்லையேல் அவர்கள் தறிகள் பறிமுதல் செய்யப்படும் என்ற சர்க்கார் உத்தரவும் பெரும் பீதியை உண்டாக்கி யிருக்கின்றன.

சேலம் ஜில்லாவில் மலைகளுக்குப் பஞ்சமேது? ஏதோ ஒரு மலை ஓரமாகக் கார் போய்க்கொண்டிருந்தது. நண்பர் எஸ். வி. ராமஸ்வாமி என்னைக் கூப்பிட்டு, "ஸார், உங்கள் இடது கைப்புறம் பூராவும் இரும்பு!" என்று கூறினார்.

எனது இடது கையைத் தட்டினேன். ஒரு இரும்புத் துகளைக் கூடக் காணவில்லை.

"அடாடா! உங்கள் இடது கையில் சொல்லவில்லை. உங்கள் இடது கைப்புறமுள்ள மலையிருக்கிறதே அது பூராவும் இரும்பு. இந்த மலைக்குக் கஞ்சமலை என்று பெயர். இங்கு தொழிற்சாலை ஏற்பட்டு இரும்பு எடுப்பது என்று ஆரம்பித்தால் இருநூறு ஆண்டுகளுக்கு எடுக்கலாம்!" என்றார்.

'அப்பாடா! இருநூறு ஆண்டுகளுக்கு இந்தப் பக்கத்துத் தொழிலாளர்களுக்கு வேலையில்லாக் கஷ்டம் நீங்கியதல்லவா!' என்று நான் எண்ணிக்கொண்டிருந்தபோதே நண்பர் மேலும் சொன்னார். "நெய்வேலியிலிருந்து பழுப்பு நிலக்கரி வரத் தொடங்கியதும், தொழிற்சாலை ஆரம்பிக்க வேண்டியதுதான்!" என்றார்.

இந்த மலையை ஒட்டினாற்போல் சென்ற கார் சுனையும் கோவிலும் சூழ்ந்த ரம்யமான இடத்தில் நின்றது. "இது என்ன கோவில்?" என்று விசாரித்தேன். உடனே இதுதான் சித்தேசுவரர் கோயில் என்று கூறினார்கள். அத்துடன் இன்னொரு கதையையும் கூறினார்கள். சித்தர்களுக்கெல்லாம் தலைவராக விளங்கியவர் இந்தச் சித்தர். இவர் தமது அபார சாதனையினால் கஞ்ச மலையை இரும்பு மலையாகவே மாற்றி விட்டாராம்!

ஒரு நண்பர் ஒரு சின்னஞ் சிறு கல்லை எடுத்து என் கையில் கொடுத்தார். அந்தக் கல்லின் பரிமாணத்துக்கு எவ்வளவு கனம் இருக்க வேண்டுமோ அதைவிடப் பன்மடங்கு அதிகமாகக் கனத்தது. "என்ன, இவ்வளவு கனக்கிறதே!" என்று அதிசயித்தேன்.



**மேலே:** உதவித் திட்ட மந்திரி ஸ்ரீ எஸ். என். மிச்ரா மேட்டூர் வாய்க்காலைத் திறந்து வைக்கிறார்.

**கீழே:** மேட்டூர் அணைத் தண்ணீர் சிமிட்டிக் குழாய்களின் வழியாகக் காவேரியைக் கடந்து சேலத்திலுள்ள வறண்ட பிரதேசத்தைச் செழிக்கச் செய்யப் போகிறது!

# இந்த மலிவான 'கோடக்'

## படங்கள் எடுப்பதை எளிதாக்குகின்றன!

நேர்த்தியான ஒரு 'கோடக்' காமிரா விலையுயர்ந்ததாகத்தான் இருக்க வேண்டுமென்பதில்லை. ஸ்பஷ்டமானதும் தெளிவானதுமான படங்களை இந்த மாடல்களில் எதன் மூலமும் நீங்கள் எடுக்கலாம்.

நேர்த்தியான காமிராக்களில் இதோ சிலவைகள் இருக்கின்றன! சுலபமாக உபயோகிக்க முடிவதால், இவைகள் பழகுபவர்களுக்கு மிகவும் ஏற்றவை. அட்ஜஸ்ட்மென்டுகள் ஒன்றும் செய்ய வேண்டிய தேவையில்லை. லென்ஸ்கள் பாக்டரியிலேயே போகஸ் பண்ணி அமைக்கப்பட்டிருப்பதால் நேர்த்தியான படங்களை இவைகளின் மூலம் எடுக்க முடிகிறது.

மேலும் இவைகள் சரசமான விலைக்குக் கிடைக்கின்றன! ஆகவே மார்க்கெட்டில் கிடைக்கும் நேர்த்தியான கோடக் காமிராவின் பல நிறுவுகளை உங்கள் கோடக் வியாபாரியிடம் காண்பிக்கச் சொல்லுங்கள். உங்களுக்கு சரியான காமிராவைத் தேர்ந்தெடுப்பதில் அவர் உதவி புரிவார்.

### 'ப்ரௌனி' 127 காமிரா

இதை கையாளுவது சுலபம். எல்லாவற்றிலும் மலிவானது! பெரிய வியூபைண்டரின் வழியாகக் குறிபார்த்து பித்தானை அமுத்தவும். 'கோடக்' 127 பிலிமில் 8 படங்களை எடுக்கலாம். .. .. ரூ. 17/8
கான்வஸ் கேஸ் .. ரூ. 3/4



### கோடக் 'ரெப்லெக்ஸ்' II காமிரா

இந்த கவின ஃபைண்டர் உள்ள காமிரா வரு வாகவும், சுலபமாகவும் இயங்குகிறது. பெரிய வியூபைண்டர் வழியாகக் குறி பார்த்து, பித்தானை அமுத்தவும். 'கோடக்' 620 பிலிம் சுருளில் 12 சிறந்த படங்கள் எடுக்கலாம். வீட்டினுள் படங்கள் எடுக்க 'கோடக்' பளாஷ்ஹோல்டரை பொருத்திக் கொள்ளவும் .. ரூ. 59/-
லெதர் கேஸ் .. ரூ. 12/-
பளாஷ்ஹோல்டர் .. ரூ. 22/12



## தெளிவான நல்ல படங்கள் எடுக்க 'கோடக்'

"இதில் அறுபது சதவிகிதத்துக்கு மேல் இரும்பு இருக்கிறது, ஸார்" என்றார் அவர்.

எனக்கு ஒரே வியப்பும் பெருமிதமும் ஏற்பட்டன. ஆகா! சேலம் ஜில்லாவில் இரும்புத் தொழிற்சாலை ஏற்பட்டு விட்டால் கூடவே எத்தனை தொழில்கள் வளரும்! தமிழகம் தொழில் துறையில் எவ்வளவு முன்னேறி விடுமென்று எதிர்காலத்தைப் பற்றிய கற்பனையில் ஆழ்ந்து விட்டேன்.

அன்று பிற்பகல் சேலத்திலிருந்து இருபது மைல் தூரத்தில் 5000 அடி உயரத்திலிருக்கும் ஏர்காடுக்குச் சென்றோம். எதற்கு? சேர்வராயன் மலை உச்சி, தூரத்திலிருந்து பார்த்தாலே பசுமை என்பதே இல்லாமல் செம்மண் பாங்காகத் தெரியும். ஏன் அங்கு மரமோ, செடியோ கொடியோ வளருவதில்லை தெரியுமா? அந்த மண்தான் அலுமினியம் நிரம்பிய "பாக்ஸைட்!" அதனால் மரம் செடிகள் அங்கே வளருவதில்லை.

ஏர்காடு மலைஉச்சியில் இம்மாதிரி குன்றுகள் ஆறு இருக்கின்றன. இந்த ஆறு குன்றுகளும் அலுமினியக் குன்றுகள். இந்த பாக்ஸைட் மண்ணில் 53 சத விகிதத்துக்கு மேல் அலுமினியம் இருக்கிறதாம். மண்ணைத் தோண்டினால், அதாவது மலையைக் குடைந்து கொண்டு முந்நூறு அடிவரையில் கீழே சென்றால்கூட அலுமினியம் கிடைக்குமென்று சொன்னார்கள். அலுமினியக் கனி இவ்வளவு உள்ள இடம் உலகத்திலேயே வேறு எங்கும் கிடையாது என்றும் சொன்னார்கள்.

இந்த பாக்ஸைட் மலையை உடல் நடுங்கும் குளிரில் பார்த்துவிட்டு ஏர்காடு ஊருக்கு வந்தோம். ஏர்காடு பஞ்சாயத்து போர்டார் மத்திய மந்திரிக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தார்கள். அதற்குப் பதில் சொல்லும்போது மந்திரி ஸ்ரீ ஸியாமநந்தன் மிஸ்ரா அவர்கள், "இரண்டாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் ஒன்பது கோடி ரூபாய் மூலதனம் போட்டு இந்த பாக்ஸைட் மண்ணிலிருந்து அலுமினியம் செய்யும் தொழிற்சாலை ஏற்படப் போகிறது. இந்தியாவில் இரண்டு இடங்களில் அலுமினியம் கிடைக்கிறது. ஒன்று, இதோ இங்கே உள்ள சேர்வராயன் மலையில். மற்றொன்று உத்தரப் பிரதேசத்தில். முதல் தொழிற்சாலை ஏற்படப் போவது இந்தச் சேலம் ஜில்லாவில் தான்!" என்றார். அப்போது அங்கே கூடியிருந்த மக்கள் சந்தோஷ ஆரவாரத்தில் செய்த கரகோஷம் வானமுகட்டை எட்டி விட்டது. வானமுகடுகூட இந்த இன்பச் செய்தியைக் கேட்க ஓடி வந்தாற்போல் தோன்றியது, அந்த மாலை வேளையில் ஏர்காடு மலைச் சாரல்களில் தவழ்ந்த மேகங்களைக் கண்ட போது.

பெங்களூரிலிருந்து ஏர்காடு வரை மத்திய மந்திரி ஸ்ரீ எஸ். என். மிச்ரா இரண்டு தினங்களில் முந்நூறு மைலுக்கு மேல் சுற்றுப் பிரயாணம் செய்தார். பல கிராமங்களுக்குச் சென்றார். பல கிராமவாசிகளை அன்போடும் ஆர்வத்தோடும் அவர்களுடைய க்ஷேமலாபங்களை விசாரித்தார். கிராம அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் செய்யப்பட்டுள்ள பல நலன்களைப் பற்றி க்கிராமவாசிகளுக்குத் திருப்தி யளிக்கிறதா என்று கேட்டார். எந்தத் திட்டத்தின் கீழ் வசதி செய்யப்படுகிறது என்பது தெரியுமா என்றும் கேட்டார். பதில் சொல்லத் தெரியாது தவித்த ஜனங்களுக்கு எடுத்துச் சொல்லி, மக்களை "கிராம அபிவிருத்தித் திட்டத்துக்கு ஜே!" என்று கோஷமிடச் சொன்னார்!

மறுநாள் 5-ம் தேதி, மேட்டூர் அணையிலிருந்து ஒரு பெரும் குழாய் வழியாகத் தண்ணீர் இறைத்துச் சேலம் ஜில்லாவிலுள்ள திருச்செங்கோடு பகுதிக்கும் கோயமுத்தூரில் ஒரு பகுதிக்குமாகச் சுமார் நாற்பத்தைந்தாயிரம் ஏக்கருக்கு மேல் பொன் விளையும் பூமியாக்கப் போகிறார்கள் என்று கேள்வியுற்றேன். இந்தப் பெரும் கால்வாயைக் கட்ட இரண்டரைக்கோடி ரூபாய்க்கு மேல் பிடித்திருக்கிறது. இந்தக் கால்வாய்க்கு மேட்டூர் அணையிலிருந்து, இயந்திர மூலம் தண்ணீர் இறைக்கப்படுகிறது. பிறகு பெருங் காங்கிரீட் குழாய்களின் வழியாகக் காவேரி நதியைக் கடக்க வைத்து வாய்க்கால் வழியாகப் பாய்ச்ச ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இத்தகைய முறைகள் வடக்கே கங்கைப் பிரதேசத்தில்தான் காணலாம். இப்பொழுது தமிழ் நாட்டிலும் செய்திருப்பது சுதந்திரம் பெற்றதன் பயன். அந்தப் புதுக் கால்வாயைத் திறக்கும் பணியை நான் மனக்கண்ணால் பார்த்து அனுபவிப்பதாகச் சொல்லிவிட்டு, நண்பர்கள் நரசிம்மன், ராமசாமி, மந்திரி மிச்ரா ஆகியவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு ரயில் ஏறினேன்!


பாரதம் வளருகிறது
1
2
3
4
5
பாரத தேசம் சுதந்திரம் பெற்ற பிறகு தேசத்தின் பல பகுதிகளில் அற்புதமான நிர்மாண வேலைகள் நடைபெற்று வருகின்றன. அவைகளை யெல்லாம் பற்றிக் கேட்கும்போதும் பார்க்கும் போதும் ஒவ்வொரு இந்தியனுக்கும் உள்ளம் விம்மிப் பெருமிதம் அடையும்.
1. லக்னௌ நகரில் மத்திய சர்க்கார் அமைத்துள்ள மூலிகை ஆராய்ச்சிக் கழகம். இதற்குச் சத்தர் மன்ஸில் என்று பெயர். 2. மேற்குவங்கத்தில் ஹூக்ளி நதித் துறைமுகம் மிக வேகமாகப் புனர் நிர்மாணம் செய்யப்பட்டு வருகிறது. துறைமுகங்களின் நிர்மாணத்துக் கென்றே 81 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. 3. தன்பாத் என்ற ஊரில் நிலக்கரி சுரங்கங்களில் வேலை செய்வோரின் குடும்பத்தினருக்குப் பலவித கைத்தொழில்கள் கற்றுத் தரப்படுகின்றன. 4. அகதிக் குழந்தைகளின் பராமரிப்பு நம்

சர்க்காரின் முதற் கடமையாகும். பீகார் மாகாணத்தில் அகர்தலா என்ற ஊரிலுள்ள ஒரு அகதி முகாம். 5. கண்டலா துறை முகத்தில் வேலைகள் மிக் ஜரூராக நடை பெற்று வருகின்றன. 6. பம்பாய்க்கு அருகாமையிலுள்ள அம்பர்நாத்திலுள்ள நுட்ப யந்திரக் கருவிப் பயிற்சிசாலையில், ஆசிரியர் மாணவர்களுக்கு எப்படி ஒரு நுட்ப யந்திரக் கருவியை உபயோகிப்பது என்று செய்து காண்பிக்கிறார். 7. பம்பாய் ஹாங்கைன் மருந்து ஆராய்ச்சிக் கழகத்தில் ஆராய்ச்சியாளர்கள் நல்ல பாம்பின் விஷத்தை எடுத்து ஆராய்கிறார்கள். 8. விசாகப்பட்டினத் துறை முகத்தில் கப்பல் கட்டப்படுகிறது! 9. தேசத்திலேயே மிகப் பெரிய எருத் தொழிற்சாலையான ஸிந்திரி எருத் தொழிற்சாலையின் தோற்றம். இப்போது எரு உற்பத்தி மும்மடங்கு பெருகிவிட்டது. 10. தன்பாத் நிலக்கரித் தொழிலாளர் குழந்தைகளுக்கு மலேரியா நோய் வராமல் தடுக்கப்படுகிறது.





# ரகுபதி ராகவ

## 40

**[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]**

**ம**க்களுக்குக் கஷ்ட நிவாரணம் செய்கிறோம் என்று சொல்லி மத மாற்றும் முயற்சிகள் நடத்துவது நல்லதல்ல. அக்கிரமம், மோசம் என்றே சொல்லக் கூடும். அதை நம்முடைய மக்கள் வெறுக்கிறார்கள். கடவுளை வழி படும் முறையும், சமயமும், மதமும் அவனவனுடைய உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சிகளைப் பொறுத்தவை. என்னுடைய வியாதியைத் தீர்த்த வைத்தியன் கிறிஸ்தவனாக இருக்கிறான். அவனுக்கு உகந்த மதம் அது. அவன் என் வியாதியைத் தீர்த்துவிட்ட படியினால் அவனுடைய மருந்தோடு அவனுடைய மதத்தையும் நான் எடுத்துக் கொள்ள வேண்டுமா? அவனிடம் நான் மருந்து வாங்கிச் சாப்பிடும் காலத்தில் அவனுக்கும் எனக்கும் ஒரு சம்பந்தம் ஏற்படுகிறது. அந்தச் சந்தர்ப்பத்தை உபயோகித்துக் கொண்டு என்னுடைய மதத்தை மாற்ற முயல்வது நியாயமாகுமா? என் வியாதியைத் தீர்த்து விட்டால் அதனால் அந்த வைத்தியனுக்குத் திருப்தியும் பெருமகிழ்ச்சியும் உண்டாகும். அதற்கு மேல் அவனுக்கு என்ன கைம்மாறு வேண்டும்? என்னுடைய மதத்தையும் மாற்ற வேண்டும் என்பது என்ன அவசியம்? கிறிஸ்தவப் பள்ளிக்கூடத்தில் என்னைச் சேர்த்துக் கொண்டு பாடம் சொல்லித் தந்தால் எனக்கு இஷ்டமில்லாத மத போதனையையும் ஏன் திணிக்க வேண்டும்? இது எல்லாம் நியாயமும் அல்ல. நன்மையும் தராது. சந்தேகமும் வெறுப்பும்தான் உண்டாகும். சமயக்கொள்கைகளைப் பிரசாரம் செய்ய வேண்டுமானால் சந்தேகாஸ்பதம் இல்லாத முறையில் செய்ய வேண்டும். அபவாதத்துக்கு இடம் கொடுக்கக் கூடாது. சமயக் கொள்கைகளை வியாகரணம் கணிதம் இவற்றைப் போல் பாடம் சொல்லிப் புகுத்தல் இயலாது. பக்தியும் வழிபாடும் வெறும் பாடங்கள் அல்ல. உள்ளத்திலிருந்து தோன்ற வேண்டும். ஆசிரியன் உள்ளத்தில் பக்தியிருந்தால் அதுதானாக அவனைச் சுற்றி சுவாசனை வீசும். பக்தியானது புஷ்பங்களைப் போல் தானாகவே தன்னுடைய சுவாசனையை விடும்.

மதமாற்றுதலை நான் வேண்டாம் என்று சொல்லவில்லை. அதற்காகத் தற்காலத்தில் எடுக்கும் முயற்சிகளைக் கண்டிக்கிறேன். மதங்களுக்கு ஆள் சேர்ப்பது ஒரு வியாபாரம் ஆகிவிட்டது. வரவு செலவு கணக்குகள்கூட வைக்கிறார்கள். ஒரு மிஷனரி ரிப்போர்ட்டில் படித்ததாக எனக்கு நினைவுக்கு வருகிறது. மதம் மாறும் ஆள் ஒன்றுக்கு எவ்வளவு செலவு என்று கணக்குப் போட்டு, அடுத்த வருஷ மகசூல் அறுப்புக்கு எவ்வளவு வேண்டும் என்று செலவுத் திட்டம் போட்டிருந்தது.

இந்திய மக்கள் அனுசரித்து வரும் வழிபாட்டு முறைகள் அவர்களுக்குப் போதும், மாற்ற வேண்டிய அவசியமில்லை என்பது என்னுடைய உறுதியான கொள்கை. கிறிஸ்து மதம், யூதர்கள் மதம், ஹிந்துக்களுடைய பல சமயங்கள், இஸ்லாம், பார்ஸி மதம், எல்லா மதங்களுமே உயிர் கொண்டு வளர்ந்து வரும் மதங்கள். எந்த சமயமுமே பரிபூரணத்தை அடையவில்லை. ஆயினும் அவரவர்களுடைய சமயம் உகந்தது. மிகப் பிரியமான முறைகள் பரஸ்பரம் நட்பும் பரிசயமும் வேண்டுமே ஒழிய 'என்னுடைய முறை சரி', 'உன்னுடைய முறை தவறு' என்று வீண் பூசல்களில் இறங்கிச் சண்டை பிடிக்க வேண்டியதில்லை. பரஸ்பரம் நட்புரிமை கொண்டு, ஒருவர் சமயத்தை மற்றவர்கள் நன்றாக அறிந்து கொண்டு வாழ்க்கை நடத்தினோமானால் எல்லாருமே குறைகளைத் தீர்த்துக் கொண்டும் சீர்திருத்தங்கள் செய்துகொண்டும் முன்னேற்றம் அடையலாம்.

தவறான முறைகளில் செய்யப்படும் மதமாற்றம் நமக்குத் தேவை இல்லை. உள்ளத்தைச் சுத்தப்படுத்திக் கொள்வது அவசியம். பாப எண்ணங்களை நீக்கிக் கொண்டு ஆத்ம தரிசனம் பெற வேண்டும், அது அல்லவோ மதமாற்றம். பிறருடைய மதத்தை மாற்ற முயல்வதற்கு முன் நமக்குள் கிடக்கும் குற்றங்களை நீக்கிக் கொள்ள வேண்டும். 'மருந்து கொடுக்கிறேன்' என்று சொல்லும் வைத்தியருக்கே ஆரோக்கியம் இல்லை. ''உன் நோயை முதலில் தீர்த்துக் கொள்'' என்று சொல்ல வேண்டியதாக இருக்கிறது. இது ஒரு பைபிள் வாசகம்!

லூக் 4-23 [யங் இந்தியா 23-4-31]

# 1,56,000

# கைத்தறி நெசவாளர்கள்
# இன்று தங்கள்
# வணக்கத்தை
# தேசத்திற்குத்
# தெரிவித்துக்
# கொள்கிறார்கள்

இந் நாட்டிலேயே — ஏன்? இந்த உலகத்திலேயே மிகப்பெரிய கைத்தறிச் சங்கம் எங்களுடையது என்பதை இந்த 9-வது சுதந்திர தினத்தன்று பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம். இது வெறும் கௌரவப் பேச்சல்ல. எங்களது கைத்தறித் துணிகள் உலகத்தின் நாகரீக நிலையங்களை எல்லாம் படை எடுத்து வெற்றி கொண்டிருக்கிறது-முக்கியமாக அமெரிக்க ஐக்கிய நாடுகளை என்பதை பெருமையுடன் தெரிவித்துக் கொள்கிறோம். நாங்கள் இந்நாட்டிற்கு இதுவரை நல்ல சேவை செய்திருப்பதாகவே எண்ணுகிறோம். இன்னும் சேவை செய்ய நிறைய இடமிருக்கிறது என்பதும் தெரியும். அதுவும் . . . உங்கள் உதவி இருக்குமானால் நாங்கள் செய்ய முடியாதது தான் என்ன ?




சென்னை ராஜ்ய கைத்தறி
நெசவாளர் கூட்டுறவு
சங்கம் லிமிடெட்,
"பாலசுந்தரம் பில்டிங்ஸ்"
34/1 - A, பாந்தியன் ரோடு,
எக்மோர், மதராஸ் - 8.

# கடல் கண்ட கனவு

சோமு

## ஒன்பதாம் அத்தியாயம்
## ஏழடிப் பட்டம்


த்திராங்க பூபதிக்குத் தன்னுடைய அருமை மகளைக் கல்யாணம் செய்து கொடுக்க விரும்புவதாக உடன்படிக்கைத் தூது அனுப்பினார் முத்தரைய மன்னர். உதய சந்திரனுக்கும் நந்திவர்மனுக்கும் உதவி செய்கிற நோக்கத்தில் முத்தரையரும் வல்லத்தரசரும் செய்த ஏற்பாடு இது. அதன்படி வலம்புரித் தீவுக்குச் சென்ற தூதுவர், பூபதியின் அன்னையான அரசியாரின் சம்மதத்தைப் பெற்றதோடு அவருடைய யோசனையின்படி பூபதியின் சம்மதத்தைப் பெறுவதற்காக மந்திரநாயகத்தைத் தம்மோடு அழைத்துக் கொண்டு வலம்புரித் தீவிலிருந்து தமிழ் நாட்டை நோக்கிப் புறப்பட்டார்.

ஆனால் இந்தச் சம்பவம் நடந்த சில நாளைக்கெல்லாம் விடுதித் தலைவன் இது விஷயத்தை இரகசியமாக அறிந்து கொண்டு தானும் ஒரு பெரிய எதிர்ச் சூழ்ச்சி செய்தான். கொடும்பாளூர் அரச பரம்பரைக்கு நாயகனாக விளங்க வேண்டிய ஆதிரையனை, கொடும்பாளூர் மன்னனாகப் பட்டம் சூடவேண்டிய இளவரசனை, எங்கோ இரகசியமாக வெளியேற்றி விட்டு, அவனுடைய சிற்றப்பனைத் தனக்கு உடந்தையாகச் சேர்த்துக் கொண்டு இப்பொழுது வலம்புரித்தீவுக்கு ஒரு கடற்படையை அனுப்பியிருக்கிறான். சில நாட்கள் முன்புவரை கடல் கடந்து யாத்திரை சென்றிருந்த ஆதிரையன், அவனுடைய யாத்திரைக் காலத்தில் அரச நிர்வாகத்தை அவனுடைய சிற்றப்பனிடம் விட்டிருந்தான். இப்பொழுதும் அவன் கடல் கடந்து சென்றிருப்பதாகவே கொடும்பாளூர் மக்களுக்கு அறிவிக்கப்பட்டது. ஆதிரையன் இப்பொழுது அரச நிர்வாகத்தை மேற்கொண்டதில் ஒரு பெரிய சூழ்ச்சி இருந்தது என்ற விஷயம் கொடும்பாளூர் மக்களுக்குப் பகிரங்கமாகத் தெரியாத முறையில் சதி செய்து விட்டான் வீர விக்கிரமன் என்ற அந்தப் பொல்லாத விடுதித் தலைவன்!

கொடும்பாளூர் அரசியலில் நெருங்கிய சம்பந்தம் கொண்டிருந்த பிரதானிகளும் பிரமுகர்களுங்கூட முதலில் இது குறித்து எவ்வித சந்தேகமும் கொள்ளவில்லை. ஆனால் ஆதிரையன் எங்கு சென்றிருக்கிறான் என்ற விவரத்தை யாரிடமும் கூறாமல் பெரிய அரசியல் இரகசியம் என்று வீர விக்கிரமன் சொல்ல ஆரம்பித்ததும், படிப்படியாக நிர்வாகிகள் சந்தேகிக்க ஆரம்பித்தார்கள். ஆனாலும் யாராலும் எதுவும் கேட்கவோ செய்யவோ முடியவில்லை. காரணம், மிகச் சிறு பிராயத்திலிருந்தே ஆதிரையனுக்குக் கடற் பிரயாணம் என்றால் உயிர்! திடீர் திடீரென்று அவன் மாதக் கணக்காக யாத்திரை சென்று விடுவான்! சமீபத்திலுங்கூட அப்படி ஒரு நீண்ட யாத்திரை சென்று விட்டுத்தான் திரும்பியிருந்தான். எனவே வீர விக்கிரமன் ஆதிரையனுடைய இந்தப் பழக்கத்தைச் சுட்டிக் காட்டிச் சிலரிடம் சமாதானம் சொன்னான். வேறு சிலரிடம் அது ஒரு இரகசியம் என்றான். இன்னும் சிலரிடம் ஆதிரையனே அதை வெளியிடக் கூடாது என்று கட்டளையிட்டிருப்பதாகத் தெரிவித்தான். கொடும்பாளூர் அரசியலில் முக்கிய நிர்வாகியாக இருந்து, அரசனாகவே தன்னைக் கருதிக் காரியங்களை நடத்தி வந்த ஆதிரையனின் சிற்றப்பன் இதற்கு மிகவும் அநுசரணையாக இருந்ததால், எத்தனை சந்தேகங்கள் குமைந்து கொண்டிருந்தாலும் வீர விக்கிரமனிடம் தைரியமாக யாரும் பேச முன்வரவில்லை. தவிரவும் அன்

நிருந்த அரசியல் நிலைமையில், வீர விக்கிரமன் நந்திவர்மனுக்கு எதிராகச் சித்திரமாயனுடைய கட்சியிலே சேர்ந்து பல தீவிர நடவடிக்கைகள் எடுத்து வருகிறான் என்ற விஷயம் கொடும்பாளூரில் ஒரு பகிரங்க இரகசியம். ஆகவே, யாரும் வீரவிக்கிரமனைப் பற்றிப் பேசவதற்கே பயப்பட்டார்கள்! கொடும்பாளூர் நிர்வாகம் ஒரே சதிக் கூட்டத்தின் பயங்கர நிர்வாகமாக நடந்து கொண்டிருந்தது. அந்த நிர்வாகத்தின் பிரதிநிதிகளைத்தான் வீர விக்கிரமன் இப்பொழுது ஒரு கடற்படையோடு வலம்புரித் தீவுக்கு அனுப்பி யிருக்கிறான்! பாண்டியர்களுடைய படை பலம் தனக்குத் துணையாக இருக்கிறது என்ற தைரியத்தில் வீர விக்கிரமன் இத்தனை துணிச்சலோடு நந்தி வர்மனுக்கு எதிராக, வெளிப்படையாக, வலம்புரித்தீவிலே தன்னுடைய தீய பார்வையைச் செலுத்தி விட்டான்!

இந்த விவரம் தெரிந்ததும் நெத்திராங்க பூபதி, வலம்புரித்தீவின் இளவரசன், பட்ட பாடு பிரளயத்திலே கொந்தளிக்கும் கடலாக இருந்தது! ஆனாலும் அவனால் அப்பொழுது என்ன செய்ய ஆகும்? அந்தக் குங்கும மாளிகையிலிருந்து வெளியேறி விடவேண்டும்; பிறகுதான் மற்ற விஷயங்களைப் பற்றி ஆலோசிக்கவே முடியும் என்றிருந்தது அவனுடைய அறிவுநிலை! அதன்படி அந்தக் குங்கும மாளிகையிலிருந்து வெளியேறுவதற்கும் இப்பொழுது யாழ் நங்கையே வகை செய்துவிட்டான்! சிவிகையிலே யாருக்கும் தெரியாமல் சித்தன்ன வாசலுக்கு வந்தாயிற்று. இனி மேற்கொண்டு தனது வலம்புரித் தீவையும், அங்கிருந்து தன்னைக் காண்பதற்கு என்றே முத்தரையர்களின் தூதுவரோடு புறப்பட்டு வந்திருக்கும் மந்திர நாயகத்தையும் பற்றி ஆலோசித்து அவர்களைச் சந்திப்பதற்கு ஏதாவது ஒரு வழி கண்டு பிடிக்கலாம் என்றால், அதற்கும் பூபதியின் மன நிலை இப்பொழுது நிம்மதியாக இல்லை! சித்தர் 'அந்தப்புரம்' என்று ஒரு வார்த்தையை உபயோகப் படுத்திப் பூபதியின் உள்ளத்தைக் குழப்பியடித்திருந்தார். இந்தச் சமணத் துறவி



களோ, 'நீங்கள் செல்ல வேண்டிய அரண்மனைக்குச் செல்லும் வரை உங்களைப் பாதுகாக்க வேண்டியது எங்கள் பொறுப்பு' என்று சொல்கிறார்கள்! இதெல்லாம் என்ன அர்த்தம்?—இப்படிக் குழம்பிக் கொண்டே யிருக்கும்போது இந்த முதலாவது துறவியோ என்றால் 'பேரியாழ்' என்ற வார்த்தையையே உச்சரிக்கக் கூடாது என்று பயமுறுத்துகிறார்! மலைச்சரிவிலே அவரோடு நடந்து செல்ல யத்தனிப்பதற்குள் இரண்டாவது துறவி ஏதோ இதயக் கூண்டு என்றும் பறவை யென்றும் ஏங்குகிறார்! இதெல்லாம் என்ன அநுபவங்கள்!—இவ்வாறு எண்ணமிட்டான் சித்திராங்கன்.

இதயக் கூண்டிலே பறவை கூப்பிடுகிறது என்கிறாரே இந்தத் துறவி. யாருடைய இதயக் கூண்டைச் சொல்கிறார்? யாருடைய இதயப் பறவையை இந்தச் சமணத் துறவி குறிப்பிடுகிறார்? தன்னையும் தன்னுடைய இதயப் பறவையையும் குறிப்பிடுகிறாரா? அவருடைய வாழ்விலும் ஏதாவது ஓர் இரகசியம் இருக்கக் கூடுமோ? அப்படி யிருந்தால் வெளிப்படையாக இப்படிப் பாடுவாரா? அதிலும் துறவுக் கோலத்தில் உள்ள ஒருவர், அதே புனிதக் கோலத்தில் உள்ள இந்தப் பெரியாருடைய முன்னிலையில் இப்படிப் பாடுவாரா? சமணத் துறவிகள் என்றால் அவர்களுடைய இதயம் பசையில்லாத உலர்ந்த கட்டையாயிற்றே! அந்த இதயத்தில் இத்தனை ஏக்கமும் உணர்ச்சிச் சுழிப்பும் இருக்க வேண்டியஅவசியம்என்னவந்தது?

சித்திராங்க பூபதி மலைச் சரிவிலே நடந்தவன் மனத்தை இப்படி யெல்லாம் எங்கெங்கோ சுழல விட்டான். நடந்து செல்லும் போதே அடிக்கடி அவன் பாதையிலே நின்றுகொண்டான். அப்படி அவன் தயங்கி நின்ற சமயத்திலெல்லாம் துறவிஅவனை மேலே நடக்கும்படி பணித்தார்.

"தயங்காதீர்கள் இளவரசே! மேலே நடவுங்கள்!" என்று சிரித்துக் கொண்டே 'பூபதியை வழி நடத்தினார் அந்தத் துறவி!

துறவியின் உத்தரவுக்குக் கீழ்ப்படிந்த போதிலும், சித்திராங்க பூபதியின் உள்ளத்தில் எழுந்த ஆவல் அடங்கவில்லை. குழப்பம் தணியவில்லை. இதைத் துறவி நன்றாகக் கவனித்தார். என்றாலும் கவனியாததுபோல மலையின் உச்சியை நோக்கி மேலே மேலே நடந்து சென்று கொண்டிருந்தார் அவர். பூபதி தன்னோடு வருகிறானா என்பதையும் அங்கங்கே நின்று திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டார்!

சித்தன்ன வாசல் மலையின் உச்சி என்று சொல்லும்படியான கோடிக்கு வந்து விட்டார்கள் இருவரும். துறவி சற்று நின்றார்.

"இளவரசே! இனி மேல் மிகவும் எச்சரிக்கையோடு மறு பக்கம் சரிவிலே நடக்க வேண்டும். ஏழடிப் பட்டம் என்ற புனிதமான இடத்துக்குச் சென்று விட்டால், பிறகு நமக்குச் சிறிதும் கவலை இல்லை. மனித சஞ்சாரமில்லாத அந்த



நிம்மதியான இடத்தில் அமர்ந்து கொண்டு உங்களுடைய சந்தேகங்களையும் குழப்பங்களையும் தீர்த்துக் கொள்ளலாம்!''

இவ்வாறு சொல்லிவிட்டுத் துறவி பூபதியின் முகக் குறிப்பைப் பார்த்தார்.

''பெரியவரே! என்ன பார்க்கிறீர்கள்? ஏன் திகைக்கிறேன் என்று பார்க்கிறீர்களா? ஏழடிப் பட்டம் என்று ஒரு வார்த்தை சொன்னீர்கள் அல்லவா, அதைக் கேட்டு விட்டுத் தான் திகைக்கிறேன்!'' என்றான் பூபதி. துறவி சொல்லுவார்:—

''பூபதி! ஏழடிப் பட்டம் என்பது இந்தச் சித்தன்ன வாசல் மலையின் கிழக்குப் பகுதி. இந்த மகத்தான புண்ணிய மலையை மூன்று பகுதிகளாக வகுத்து மூன்று அதிசயங்களாக வியந்து சொல்லுவார்கள். இந்த மூன்று பகுதிகளிலும் மூன்று விதமான சிறப்புகள் உண்டு. இந்த மூன்று சிறப்புகளிலும் மிகமிக விசேஷமாகத் துறவிகள் கொண்டாடிப் போற்றுவது இந்த * ஏழடிப் பட்டம் என்ற இடத்தைத்தான். காரணம் இங்கே தான் அந்தப் பதினேழு படுக்கைகளும் இருக்கின்றன!'' என்றார் அந்தத் துறவி.



''படுக்கைகளா!'' என்று கேட்டான் சித்திராங்க பூபதி, ஆச்சரியத்தோடு.

''ஆமாம். கல்லால் ஆன படுக்கைகள் அவை. இந்த மலையின் இயற்கை யமைப்பு இருக்கிறதே அது ஒரு விசித்திரம். இந்த ஏழடிப் பட்டம் அமைந்திருக்கிற விதம் ஓர் அதிசயம். அந்த இடத்தில் மலையின் பாறையே இரண்டு பிரிவாகப் பிரிந்து, கூரையும் அடித்தளமுமாக நிற்கிறது. மலைச் சரிவில் பாறை அப்படிப் பிளந்து கொண்டு நிற்கிறது. அந்தப் பிளவில், கூரைக்குக் கீழேயுள்ள அடித்தளம் மிகவும் வழவழப்பாக இருக்கும். அந்த வழ வழப்பான பாறையில் பதினெட்டுப் படுக்கைகள் அமைந்திருக்கின்றன. படுக்கைகளுக்குக் கல் தலையணைகளும் இருக்கின்றன! பெரிய பெரிய ஞாதாக்களும், மகாத்மாக்களும், சமண ஞானிகளும் நடமாடிய இடம் இது. அவர்கள் சயனித்த படுக்கைகள்தான் இவை. இவற்றில் ஒன்றிலேதான் மிக மிகப் புராதனமான எழுத்து இருக்கிறது. இங்கேயிருந்த சமணப் பெரியார்கள் சிலரின் திருநாமங்களையும் கல்வெட்டிலே படித்துப் பார்க்கலாம். என்ன இளவரசரே! அங்கே போய் விடுவோம். காரணத்தோடுதான் அழைத்துப் போகிறேன். தயங்காதீர்கள். ஏழடிப் பட்டத்திலே போய் அமர்ந்து விட்டால், மழை பெய்தாலுங்கூட ஒரு சொட்டுத் தண்ணீர் நம்மீது விழாது. எத்தனை பனி பெய்தாலும் உடம்பிலே உறைக்காது. அப்படி அமைந்திருக்கிறது அந்த இயற்கையின் கற் கூரை. வாருங்கள், உங்களுக்கு ஒரு கதை சொல்லுகிறேன்!'' என்றார் துறவி.

''கதையா?'' என்று கேட்டான் பூபதி.

''ஆமாம். கதைதான். ஆனால் வெறுங் கற்பனையில்லை. நடந்த விஷயங்கள்! யாருடைய வாழ்விலோ நடந்த சம்பவங்கள் என்று எண்ண வேண்டாம். நம்முடைய முன்னோர்களின் வாழ்வில் நடந்த சம்பவங்கள். நம்மோடு மிகவும் தொடர்பு உடைய சம்பவங்கள். நம்மை மிகவும் பாதிக்கிற சம்பவங்கள். இன்றைய தமிழ் நாட்டின் சூழ்நிலையை, இன்றைய தமிழாட்சியை, இன்று இங்கே யிருந்து பேசிக்கொண்டிருக்கும் உங்களையும் என்னையும்கூட, பாதிக்கிற சம்பவங்கள்!''

இவ்வாறு கூறினார் துறவி.

ஏழடிப் பட்டத்தை நோக்கிச் சென்று, பயங்கரமான அந்த மலைச் சரிவின் குறுகலான படிகளைத் தாண்டி நடந்தார்கள் பூபதியும் துறவியும்! இடது கைப் பக்கம் மலையின் உச்சி, சுவர் போன்று எழுந்து நின்றது. வலது புறம் அதல பாதாளமான பெரும் பள்ளம். மத்தியிலே மலைப்பாறையிலே ஓடிய அந்தச் சிறிய பாதையில் செல்லும்போது பூபதி அடிக்கடி துறவியின் கைகளைப் பிடித்துக் கொண்டான். சில சமயங்களில் இடது புறம் ஓங்கி நின்ற அந்த மலைச் சுவரிலே சாய்ந்து நின்றுகொண்டான். முடிவில் அவர்கள் ஏழடிப் பட்டத்துக்கு வந்து சேரும்போது நன்றாக இருட்டிவிட்டது. நிலவு இன்னும் உதிக்கக் காணோம். பூபதிக்கு அந்தச் சூழல் பயங்கரமாகத்தான் இருந்தது. ஆனாலும் அன்பிலும் அஹிம்சையிலும் நடமாடிய புனிதமான சமயத் துறவிகளின் பாதம் பட்ட இடம் அல்லவா அது! அந்த நினைவு பூபதியின் உள்ளத்தில் அவனையும் மீறி ஒரு சாந்தியைத் தந்தது.

கல்லாலாகிற ஒரு திண்டிலே சாய்ந்தவாறு துறவி பேச ஆரம்பித்தார். அவருக்கு அருகில் மிக்க பணிவோடு அமர்ந்து அவர் சொன்ன கதையைக் கேட்டான் பூபதி. அப்படிக் கேட்டுக் கொண்டிருக்கும் போதே, அவன்

* சமணத் துறவிகளின் இருப்பிடமாக இருந்த இந்த அதிசயப் படுக்கைகளையும், கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் தோன்றியவை என்று சொல்லப்படும் புராதனமான எழுத்துக்களைத் தாங்கிய கல்வெட்டுக்களையும், புதுக்கோட்டைக்கு அருகிலேயுள்ள சித்தன்ன வாசல் மலையின் உச்சியிலே, கிழக்குச் சரிவிலே இன்றைக்கும் காணலாம்.

# புதுமை பெறுக!

## இதம் பெறுக! நளினமாய் இருங்கள்!

நாள்முழுதும்!

சிறந்த, இன்பகரமான மண முள்ள சார்மிஸ் டால்கம் பவுட ரால் ஏற்படும் உணர்ச்சிகள் இவை. குளித்தபின் மேனிமுழுதும் சார்மிஸ் டால்கம்பவுடரைத்தூவுக. எத்தகைய புதுமை, குளுமை - தெய்வீகக்குளு மை ஏற்படுகிறது! அரிப்பு வராமல் அதன்பட்டுப் படலம் பாதுகாக் கிறது. சிக்கனமான, அத்யா வசியப் பொருள் சார்மிஸ் டால்கம் பவுடர். இன்பம், அழகின் இரகசியம் அது.






# சார்மிஸ்

## டால்கம்பவுடர்

மிகவும்

## சிறந்த இன்ப மணமுள்ளது

---

கால்கேட் சார்மிஸ் வாசனைத்திரவியங்கள் சகல-உபயோககிரீமும் ஸ்னோவும் உள்ளன-எல்லாவித சருமங்களுக்கும் ஏற்ற இரு பிரபல வதன கிரீம்கள்.

---

*பார்த்தவுடன் நம்பிக்கை—*

# அவர்கள் ட்ரேயோபேன்* அச்சடித்த பைகளில் காணும் பொருள் களை வாங்குவது நிச்சயம்!





அச்சடித்த ட்ரேயோபேன் பைகள் விற்பனையை அதிக ரிக்கும் என கடைகாரர்களும் பொருள் உற்பத்தி செய்பவர்களும் கரு துகிறார்கள். சாமான் வாங்குபவர்கள் ட்ரே யோபேன் பைகளை விரும்புகிறார்கள். ஏனெனில் அவை சுத்த மானவை. செளகரியமானவை. சீதோஷ்ணத்தால் பாதிக்கப் படாதவை. இப்பைகள் கடைக்காரர்களின் பாக்செய்யும் நேரத் தையும், தாள்கள வீணாவதையும் குறைக்கின்றன.

இந்தியாவில் முதன்முதலாக ட்ரேயோன்ஸ் கவர்ச்சிகரமான இப்பைகளை பல நிறங்களிலும் அளவுகளிலும் அளிக்கிறார்கள். 12 ⅞" X 23 1/32" வரை. உங்கள் பெயர் அச்சிடப்பட்ட பிரத் தியேகமான பைகளுக்கு இன்றே ஆர்டர் செய்யுங்கள்.

| | |
|---|---|
| **ட்ரேயோபேன்*** அச்சடித்த பைகள் | மலிவானவை! சுத்தமானவை! செளகரிய மானவை! |

* ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் தாளின் புதிய பெயர்

தயாரிப்பாளர்கள்:

TRAYONS **தி திருவாங்கூர் ரேயன்ஸ் லிமிடெட்.,**

ரேயான்புரம் போஸ்ட், திருவாங்கூர் - கொச்சி.

ஸேல்ஸ் ஆபீஸ்: யுனைடெட் இந்தியா பில்டிங், மதராஸ்-1

TR 872

கண் முன்னால் மலையும் நீலவானமும் மறைந்து விட்டன. அலைகடலும் அந்த அலைகடலிலே தலைதூக்கி நிற்கும் வலம்புரித்தீவும் பூபதியின் கண்முன்பு நின்றன. வானத்தில் சந்திரன் உதித்ததும், நட்சத்திரங்கள் கண் சிமிட்டியதும், பிறகு இரவு முழுதும் நகர்ந்து சென்று நீல வானத்தில் செவ்வொளி படர்ந்ததும், சூரியன் உதித்ததும் — ஒன்றும் பூபதியின் கண்ணுக்குத் தெரியவில்லை. அவனுடைய உடம்பையும் உள்ளத்தையும் வலம்புரித் தீவிலே கொண்டு போய் நிறுத்தி விட்டது. துறவி சொன்ன கதை.

## பத்தாம் அத்தியாயம்
# துறவி சொன்ன கதை

"இளவரசரே! நான் சொல்லப் போகும் சம்பவம் நடந்தது 'வாத்ய வித்யாதரன்' என்ற பல்லவ அரசன் காலத்தில்! அந்த அரசன் இப்பொழுது பிரபல மன்னனாக வீற்றிருக்கும் நந்திவர்மனுக்கு முந்திய அரசனுக்கு முந்தியவன். அதாவது நந்திவர்மனுக்கு முன்னால் அரசாண்டவன் பரமேசுவர வர்மன். அவன் ஆண்டது ஐந்தே ஆண்டுகள் தான். நான் சொல்லும் வாத்ய வித்யாதரன் என்ற ராஜசிம்மன் ஆண்டது இந்தப் பரமேசுவரவர்மனுக்கு முன்னால்!''

இவ்வாறு தொடங்கினார் துறவி. அவர் ஓர் இரவு முழுதும் சொன்ன அந்த நீண்ட கதையின் சுருக்கம் வருமாறு :—

ராஜசிம்மன் என்ற அரசனின் முன்னோர்களுடைய காலத்தில் பேரியாழ் என்ற வாத்தியம் மிகவும் புகழ் வாய்ந்து விளங்கியது. அந்த யாழிலே எத்தனையோ பல புதுமைகளை யெல்லாம் செய்து காட்டிய பாணர்கள் செந்தமிழ் நாட்டில் வாழ்ந்திருந்தார்கள். மகேந்திர வர்மன் காலத்தில் கடல் கடந்த தீவுகளில் தமிழ் நாட்டிலிருந்து சென்று குடியேறி, கலைகளை யெல்லாம் நிம்மதியான சூழ்நிலையிலே யுத்தக் குழப்பங்கள் ஏதுமின்றி ஆனந்தமாக வளர்த்த அதிசயக் கலைஞர்கள் பலர். இந்த வரலாறுகளை யெல்லாம் மகேந்திரனுக்குப் பின்னால் வந்த ராஜசிம்மன் நன்றாகக் கற்றுத் தேர்ந்தான். அவனுடைய மந்திரி குமாரர்களில் மிகவும் முக்கியமானவனும், கொடும்பாளூர் வேளிர் குடும்பத்தைச் சேர்ந்தவனுமான சந்திரசூடன் என்ற வாலிபனுக்கு இசையில் பல நுட்பங்களைக் கற்றுத் தேர்வதற்கு வேண்டிய வசதிகளை யெல்லாம் செய்து கொடுத்தான் ராஜசிம்மன்.

சந்திரசூடன் என்ற அந்த வாலிபன் மேனியழகும், குணத்தின் எழிலும் ஒருங்கே நிரம்பிய ராஜ குமாரன். கொடும்பாளூர் அரச பரம்பரையின் சிறப்பும் சீலமும் பிறப்புரிமையாகக் கலந்து அவனுடைய உள்ளத்திலே அபாரமான பண்புகளை நல்கி யிருந்தன! அந்த வாலிபனின் கலைத்திறமை நாளுக்கு நாள் மிக உயர்வான முறையில் வளர்ச்சி அடைந்து வருவதைக் கண்ட ராஜசிம்ம மன்னன், அளவு கடந்த ஆனந்தம் அடைந்தான். அரசியல் வட்டத்திலே இந்த அன்பைப் பற்றிப் பல இரகசியப் பேச்சுக்கள் கூட நடந்தன. ராஜசிம்மன் தன்னுடைய மகளைச் சந்திரசூடனுக்குக் கொடுக்கப் போகிறான் என்று அமைச்சர்களிலே கூடச் சிலர் சொல்லிக் கொண்டார்கள்.

இப்படியிருக்கும் போதுதான் ஒரு நாள் மானக் கவரம் என்ற தீவிலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்த ஒரு வணிகர் அரசனை அரச சபையிலே முகமன் கண்டார்! இந்த முகமன் பெரிய சிக்கலாகப் போய் விட்டது!

விபரீதம்' ஒன்றும் இல்லை. நடந்தது எல்லாம் ஒரு சிறு பிரஸ்தாபந்தான். அந்தப் பிரஸ்தாபந்தான் சந்திரசூடனுடைய வாழ்வை அத்தனை பாதித்து விட்டது.

மாணக்கவரம் என்ற தீவிலிருந்து வந்திருந்த அந்த வணிகர், வலம்புரித் தீவைப் பற்றியும் அந்தத் தீவிலே உள்ள அம்மன் கோவிலில் அர்த்த ஜாம பூஜையிலே வாசிக்கப்படும் பேரியாழைப் பற்றியும் பிரஸ்தாபித்தார்.

''அந்தப் பேரியாழ்தான் நமது அரசவையிலும் இருக்கிறதே! மல்லிநாத யாழ்ப் பாணர் என்ற பெரியார் மகேந்திர வர்மன் காலத்தில் வலம்புரித் தீவிலிருந்து இங்கு வந்து அநேக சாதனைகளைச் செய்தாரே!



அதைத்தானே குறிப்பிடுகிறீர் வணிகரே'' என்று கேட்டான் ராஜசிம்மன்.

''இல்லை. அதைச் சொல்லவில்லை. நான் சொல்கிற பேரியாழை அந்தத் தீவின் கோவிலிலேதான் பார்க்கலாம். வேறு எங்கும் அது கிடையாது!''

இவ்வாறு சொல்லி அந்த யாழின் மகிமைகளை வர்ணித்தார் வணிகர். அதன் பயனாக, என்ன நேர்ந்தது? வணிகர் சென்ற மறு நாள் ராஜசிம்மன் சந்திரசூடனைக் கூப்பிட்டு



**ராஜு :—நான் தினமும் ஒன்பது மணிக்குப் படுத்தால், காலையில் ஆறு மணிக்கே எழுந் திருந்து விடுவேன் !**

**பாபு :—உனக்கும் எனக்கும் கொஞ்சம் வித்தியாசம்தான். நான் தினமும் ஆறு மணிக்குப் படுத்தால் காலை ஒன்பது மணிக்குத் தான் எழுந்திருப்பேன் !**

வலம்புரித் தீவுக்குச் சென்று அந்த அம்மன் கோவிலிலே உள்ள யாழை எப்படி வாசிப்பது என்று கற்று வருவதோடு, முடிந்தால் அது போன்று வேறொரு யாழ் செய்து எடுத்து வர வேண்டும் என்றும், முடியாவிட்டால் அந்த யாழையே கொண்டு வருவதற்கு வழியுண்டா என்று பார்க்கும்படிக்கும் கட்டளையிட்டான்.

சந்திரகுடன் மறு வாரம் மாமல்லபுரத்தி லிருந்து வலம்புரித் தீவுக்குப் புறப்பட்டான். முப்பது இரவும் முப்பது பகலும் கடலிலே பிரயாணம் செய்த அலுப்போடு, அவன் வலம்புரித் தீவுக்கு வந்து சேரும்போது ஜாம வேளை! ''மரக்கலத்திலேயே தங்கி விட்டு விடிந்ததும் நகரத்துக்குள் செல்லலாம்'' என்று சகபிரயாணிகள் சொன்னார்கள். ஆனால் சந்திரகுடனால் அங்கே ஒரு விநாடிகூட இருக்க முடியவில்லை. காரணம், அப்பொழுது கன்னி கோயிலிலிருந்து யாழிசை காற்றிலே மிதந்து வந்து கொண்டிருந்தது.

சந்திரகுடன் மரக்கலத்திலிருந்து இறங்கி வலம்புரித் தீவின் கன்னி கோவிலை நோக்கி நடக்க ஆரம்பித்ததும், அவனுடைய நடை யின் வேகம் அதிகரித்தது. கோயிலிலிருந்து வந்த இசை ஏதோ ஒரு கயிற்றுப் பாசத்தினால் அவனுடைய கால்களை இழுத்தது. 'விறு விறு' என்று நடந்து கோவிலுக்குள்ளே சென்றான் சந்திரகுடன். அப்படியே ஸ்தம் பித்து விட்டான் அவன்!

அம்மன் சந்நிதியிலே வயது முதிர்ந்த பாணர் ஒருவர் மிகப் பெரிய யாழ் வாத்தி யம் ஒன்றைத் தமது உடம்பிலே சாத்திக் கொண்டு, மெய்ம்மறந்த நிலையிலே விரல் களை ஓட விட்டுக் கொண்டிருந்தார். அந்த வாசிப்பிலே அப்படியே சொக்கிப் போனவ னாக நீண்ட நேரம் அங்கேயே அசைவற்று நின்றான் சந்திரகுடன். அவனோடு சேர்ந்து, அந்த யாழின் இசையிலே கடலும், வான மும், சந்திரனுமே அசைவற்று நின்றனவோ என்று சொல்லும்படியாக இருந்தது. இசை யிலே தவழ்ந்த அமைதி !

சந்திரகுடன் அந்த முதியவரைக் கூர்ந்து பார்த்தான். அவருடைய மேனியிலே சாய்ந் திருந்த வீணையைப் பார்த்தான். அந்த வீணையிலிருந்து இழைந்த இசைக்கு மனக் கண்ணிலே ஒரு ரூபம் கொடுத்துப் பார்த் தான்! அவருக்கு எண்பது வயது ! அவர் ஏந்தியிருந்த வீணைக்கு எண்பது பரம்பரை களின் வயது இருக்க வேண்டும் ! அவருடைய விரல்களிலே அந்த வீணையிலிருந்து எழுந்த இசைக்கோ எண்பதாயிரம் வயது என்று சொல்ல வேண்டும் ! வேறு எப்படி அந்த இசையைக் கணிப்பது! எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளாகக் கடலிலே தவழ்கிற அலைகளை யும், எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளாக நீல வானத்திலே ஓடுகிற மேகங்களையும், இவற்றை அணைத்துக் கொண்டு எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளாக வான வெளியிலே சுழல்கிற காற்றையும் போல அந்த முதிய வரின் விரல்களின் விளையாட்டிலே அந்தத் தந்திகளிலிருந்து பிறந்து வருகிற இசையும் எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளாக மனித உள்ளங்களின் கற்பனைகளையும் செவிகளையும் இணைத்துக் கொண்டு வழங்கி வருகிறது !

சந்திரகுடனுடைய மனோலயம் இப்படிச் சென்று கொண்டிருந்தது வெகுநேரம். இறுதி யில் முதியவர் யாழ் வாசிப்பை முடித்து விட்டு வாத்தியத்தை மெதுவாக நகர்த்தி னார். அப்போது ஒரு வாலிபப் பெண் வந்து அவரைக் கையைப் பிடித்து மெதுவாகத் தூக்கி விட்டாள். உடம்பெல்லாம் ஆடுகிற கிழவர். கண் பார்வை கூடச் சரியாக இல்லை. ஆனாலும் அந்த வாசிப்பிலே என்ன நிச்சயம்! இந்த ஜட உலகத்திலே பூமியின் மேல் வழி கண்டு பிடிப்பதுதான் அந்தக் கிழவரின் வயதான கண்களுக்கு முடியவில்லை. ஆனால் கற்பனை கடந்த உலகிலே ராகப் பாதைகளிலே அவருடைய மனக்கண் எத்தனை நிச்சயத்தோடு செல்கிறது ! இதைப் பார்த்த தும் சந்திரகுடன் நினைத்தான். ''இசை யென்றால் அது இந்த உடம்பை ஒட்டிய காரி யமே யில்லை. உடலுக்கு அப்பாற்பட்ட ஒரு தத்துவம், ஆத்மாவோடு ஒட்டியது அது !''

இவ்வாறு எண்ணிக் கொண்டிருக்கும் போதே, அந்த முதியவரைக் கையைப் பிடித் துத் தூக்கிய வாலிபப் பெண் இந்தப் பக்கம் அந்தப் பக்கம் திரும்பிப் பாராமல் பாணரை அழைத்துக் கொண்டு கோவிலின் சுற்றுக் குள்ளே நடந்தாள்.

கதையின் இந்தக் கட்டத்தைச் சொல்லும் போது சமணத் துறவி சித்திராங்க பூபதியை ஒருதரம் ஓரக்கண்ணால் பார்த்துக் கொண்டே தமது பேச்சைத் தொடர்ந்தார் ! **(தொடரும்)**

இல்லாள் அல்லது சமூகப்
பெண்மணியானாலும். . . .

# சாரங்பூரின்

கட்டி பிரிண்ட்
செய்த வாயில், ஆர்கண்டி புடவைகள்,
உன்னதமான தலைப்புகள் கொண்டதால்
ஒவ்வொரு பெண்மணிக்கும் உகந்தவை.

காலை காப்பி வேளைக்கு
சிநேகிதர் வீட்டிற்கு
போவதானாலும் அல்லது
வீட்டிலேயே வேலையானாலும்
—எடுப்பான, மெல்லிய,
கவர்ச்சிகரமான தலைப்புடன்
கூடிய நேர்த்தியான இந்தப்
புடவைகளை அணியுங்கள்.

மற்ற சாரங் துணிகள்:
- SANFORIZED பாப்ளின்கள், ஷர்டிங்குகள், ஸூட்டிங்குகள்.
- கட்டி பிரிண்ட் செய்த ஆர்கண்டி லான்.
- ப்ளாக் பிரிண்ட்ஸ்

சாரங்பூர் காட்டன் மான்யுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்
அகமதாபாத்.

PSSM-30



# அன்பளிப்பு

ஏ.கே.பட்டுசாமி

கல்கி ஜூபிலி மாதச் சிறு கதைப் போட்டி

நூறு ரூபாய் பரிசு பெற்ற கதை.

சரளா தனது அழகிய உருவத்தை நிலைக் கண்ணாடியில் உற்று நோக்கினாள். செக்கச் சிவந்த மேனியிலே குளுமையான சந்திரகிரணங்களின் மந்தஹாசம், இளமையின் மெருகேறிய அங்கங்களில் மின்னற் கொடியின் துடிப்பு, விசால நேத்திரங்களில் அலை ஓய்ந்த ஆழ் கடலின் காம்பீர்யம், நிமிர்ந்த நாசியின் கீழ் கச்சிதமாக அமைந்திருந்த செவ்விதழ்கள் — இவை பாரிஜாத மலரின் கீழுள்ள பவழநிறக் காம்புகளை நினைவுறுத்தின. அவள் தனது மிருதுவான கரங்களால் ரோஜாக் கன்னக் கதுப்புகளைத் தடவிப் பார்த்துக் கொண்டாள். ஆகா! எத்தனை வழவழப்பு! பட்டுப் போன்ற சருமம்! எளிதாக வளைந்து கொடுக்கக்கூடிய உடலிலே லாகவமாக உடுத்திருந்த மெல்லிய சந்தன நிறப் பட்டுச் சேலையும் பச்சை வர்ண வெல்வெட் ரவிக்கையும் அவளது அழகை அதிகரித்துக் காட்டின.

ஆம், சரளா ஒப்பற்ற அழகிதான்! அந்த வட்டாரத்துப் பெண்களே இதை ஒப்புக் கொண்டார்கள். அழகு மாத்திரமென்ன? அந்தஸ்தும், கௌரவமும் அதிகாரமும் கூட அவளுக்கு இருந்தன. 'பெரிய போலீஸ் அதிகாரியின் மனைவியான அவளுக்கு என்ன குறைச்சல்?' என்று பொறாமைப் படாத பெண்களே இல்லை.

ஆனால்........

கண நேரத்தில் அவளது கண்ணொளி மங்கியது; புத்தப் புது மலர் போலப் பூத்த இதழ்கள் கூம்பின. வதனத்தில் சோகத்தின் சாயை திரையிட்டது. இதயத்தின் அஸ்திவாரத்திலிருந்து ஒரு நெடுமூச்சு வெளிப்பட்டது. அழகும் அந்தஸ்தும் அதிகாரமும் இருந்தும் தான் ஒரு அரக்கனின் கையில் சிக்கி விட்ட அல்லி மலர் என்பதை அவள் யாரிடம் கூறுவாள்!

வாட்டசாட்டமான உருவம், கடுகடுத்த முகத்திலே அனலைக் கக்கும் பார்வை, ரத்தச் சிவப்பேறிய கருணையற்ற கூரிய கண்கள், சிரிப்பென்பதையே அறியாத



இறுகியிருக்கும் உதடுகளுக்கு மேல் துடிக்கும் வில் மீசை. இனிமையற்ற இடிமுழக்கம் போன்ற குரல். இவற்றைத்தான் சரளா தன்னுடைய கணவனிடம் கண்டாள்.

ஆதரவோடு அணைக்காவிடிலும் ஆத்திரத்தோடு விரட்டாதிருந்தால் எத்தனை நன்றாக இருக்கும்! அவளை அடிமைப்படுத்த அவன் அன்புக்குப் பதில் அதிகாரத்தைக் கையாண்டான். கொலைகளையும் கொடுஞ் செயல்களையும் பார்த்துப் பார்த்து அவனது நெஞ்சம் கல்லாகி விட்டது போலும். அவனது பார்வையிலே சந்தேகத்தின் நிரந்தரமான நிழல். அவளிடம் பேசும் போது கூடக் குற்றவாளிகளிடம் பழகுவது போன்ற ஒரு உணர்ச்சி — நிலவியிருந்தன. விவாகமாகி இரண்டு வருடங்களாகியும் அவளது உறவினர்கள் எவரையுமே அண்ட விட்டதில்லை. அவளுக்கும் எங்கும் போக அனுமதி இல்லை. அவள் ஒரு கூண்டுக் கிளி!

அவன் வீட்டுக்குள் நுழைந்தான் என்றால் அவள் இதயம் ஆனந்தத்துக்குப் பதில் அச்சத்தினால் படபடத்தது. ஆனால் தன் உணர்ச்சிகளை என்றுமே அவள் வெளிக்குக் காட்டியவளல்ல. ஆகவே, மற்றப் பெண்கள் அவளைப் பாக்கியசாலி என்றுதான் நினைத்து வந்தனர்.

ஜன்னல் வழியாக எட்டிப்பார்த்தாள். வானத்திலே புகை போன்ற மங்கலான மேகக் குவியல்கள் ஊர்ந்து கொண்டிருந்தன. மாலை மணி ஆறாகிவிட்டது. ஒன்பது மணிக்கெல்லாம் கணவன் வீடு வந்து விடுவான். பிறகு அவள் தனது பஞ்சை வாழ்வை எண்ணி மனமார ஏங்க முடியாது.

வாசல் வெளிக் கதவு கிரீச்சிட்டது. அழுக்கடைந்த வெள்ளை ஜிப்பாவும், கலைந்த கிராப்பும், சிவந்த முகத்திலே கவனிக்கப்படாமல் முளைத்துக் கிடந்த தாடியுமாக ஒரு வாலிபன், கையில் ஒரு தோல் பையுடன் தோட்டத்துப் பாதையில் நுழைந்தான். சரளா திடுக்கிட்டாள். ''பாலு!'' என்று முணுமுணுத்தன அவளது உதடுகள்.

பாலு! அவளது பால்ய நண்பன்!.. அவளது உள்ளத்தின் ஒரு புறத்தில் ஆனந்தம் கரைபுரண்டது. பழங்கால இனிய நினைவுகள் போட்டி போட்டுக் கொண்டு எழுந்தன. ஆனால் மறுபுறம் கணவன் வருகிற நேரமாயிற்றே என்ற பயம் பிடித்துக் கொண்டது. வீடு தேடி வருகிறவனை 'வராதே!' என்று எப்படிச் சொல்ல முடியும்?

''சரளா!'' என்று ஆனந்தத்தோடு குழந்தைபோல் கபடமின்றிக் கூப்பிட்டுக் கொண்டே வந்தான் பாலு. அவளும் முகத்தில் புன்னகையை வரவழைத்துக் கொண்டு, ''வா பாலு. எங்கே இருக்கிறாய், என்ன செய்கிறாய்?'' என்று வரவேற்றாள்.

பாலு ஒரு வறட்டுச் சிரிப்பு சிரித்தான்.

''அநாதைக்கு ஒரு நிலையான இடமேது, சரளா? எங்கேயாவது கொஞ்ச நாட்கள் உத்தியோகம் பார்க்க வேண்டியது; கையில் சிறிது பணம் மிச்சப்பட்டதென்றால் வேலைக்கு விடுதலை கொடுத்து விட்டு ஊர் ஊராகச் சுற்ற



வேண்டியது. கடைசிப் பைசா காலியானவுடன் மீண்டும் வேலையைப் பற்றிக் கவலைப்பட வேண்டியது!''

அவனது விழிகளிலே ஒரு சூன்ய பாவம்! உடல் நலத்தையோ ஒழுங்கையோ லட்சியம் செய்யவில்லை என்பதற்கு அடையாளமாக எத்தனையோ அறிகுறிகள்! இரண்டு ஆண்டுகளுக்கு முன் பார்த்த யௌவனம் நிலைக்கும் கறுகறுப்பான பாலுவுக்கும் எதிரே பித்துப் பிடித்தவனைப் போல் நிற்கும் இவனுக்கும் எத்தனை வித்தியாசம்!

''உட்கார் பாலு. இதோ வந்துவிட்டேன்'' என்று உள்ளே சென்றாள் அவள். சிறிது நேரத்துக்குப் பிறகு கையில் காப்பியுடன் கூடத்துக்கு வந்தபோது அவன் சுவரில் மாட்டப்பட்டிருந்த அவளது புகைப் படத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''சரளா, உன் சமாசாரத்தைச் சொல்லவே இல்லையே!..உன் கணவர் உன்னை அன்பாக வைத்துக் கொண்டிருக்கிறாரா....?''

''இதென்ன கேள்வி, பாலு? கணவர் என்றால் அன்பில்லாமலா இருப்பார்? இந்தா, இந்தக் காப்பியைக் குடித்து விட்டு....''

அவள் பேச்சைக் குறையாக நிறுத்தினாள்.

''குடித்து விட்டு....?''

அவனைக் 'கணவன் வருவதற்குள் போய் விடு!' என்று எப்படிக் கூறுவது?

''ஒன்றுமில்லை, காப்பியைக் குடித்துவிட்டுக் குளி என்றேன்! உடம்பெல்லாம் ஒரே புழுதியாக இருக்கிறதே!....ஆமாம், இப்படியே வாழ்க்கையில் ஒரு நிலையில்லாமல் இருந்தால் எப்படி, பாலு! வீடு வாசல் என்று....''

''ஹூம்! நிலையாக நான் யாருக்காக உழைக்க வேண்டும்?..எனக்கு எதற்கு வீடும் வாசலும்?..நான் வந்தால் சந்தோஷப்படுவதற்கும், வராவிட்டால் துயரப் படுவதற்கும் எனக்கு யார் இருக்கிறார்கள்?''

''பைத்தியக்காரன் பாலு நீ! உனக்குப் படிப்பில்லையா? வயதாகி விட்டதா? பேசாமல் ஒரு நல்ல இடமாகப் பார்த்து....''

''வேண்டியதுதான்! டால்ஸ்டாய் கூறினான்: 'ஒவ்வொரு மனிதனுக்கும் ஆறடி நீளமும் இரண்டடி அகலமும் உள்ள இடம் தேவை' என்று! எதற்குத் தெரியுமா? இறந்த பின் குழி தோண்டிப் புதைப்பதற்கு!''

அவன் சிரித்தான். அவளது முகம் வாடியது. கண்கள் கலங்கின. முகத்தை மறுபுறம் திருப்பிக் கொண்டாள்.

''சீக்கிரம் குளித்துவிடு, பாலு! பத்தே நிமிஷத்தில் சமையலாகி விடும். சாப்பிட்டு விட்டுப் போகலாம்!'' என்று பேச்சை மாற்ற முயன்றாள் அவள்.

''என்னை இப்போதே போகச் சொல்லுகிறாயா சரளா? வடக்கே எங்கேயோ இருந்தேன். இரண்டு வருஷங்களாகவே உன்னைப் பார்க்க வேண்டுமென்று ஆவலாக இருந்தது. விவாகத்துக்குக்கூட வரவில்லையே, இப்போது வெறுங் கையோடு எப்படி வருவது என்று விழித்துக் கொண்டிருந்தேன். இதோ பார்! உனக்காக நான் என்ன வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன் என்று!....''

அவன் தனது தோல் பையைத் திறந்து ஒரு காகிதப் பொட்டலத்தை எடுத்துப் பிரித்தான். மின்சார விளக்கொளியில் அவனது கரத்திலிருந்த—தங்கச் சரட்டில் கோத்த வைரப் பதக்கம் பளபளவென்று ஜொலித்தது. சரளாவின் கள்ளமற்ற குழந்தை முகம் விகசித்தது. அவள் அதை வாங்கிக்கொள்ளக் கையை நீட்டினாள்.

இருண்ட வானத்திலே திடீரென்று ஒரு மின்னல்! அதைத் தொடர்ந்து அண்டம் கிடுகிடுக்கும் இடியோசை! அவள் நீட்டிய கையைச் சடக்கென்று இழுத்துக் கொண்டாள். இயற்கை அவளை எச்சரிக்கிறதா?....

''வாங்கிக் கொள் சரளா! உனக்கு எனது அன்பளிப்பு! இரண்டு வருஷங்களாக உனக்காகச் சிறிது சிறிதாகச் சேர்த்து வைத்த பணத்தில் வாங்கினேன்!'' என்று குரலில் ஆனந்தம் பொங்கக் கூறினான் பாலு!

**ப**ன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னால்!... இருவரும் பள்ளிக்கூடத்திலிருந்து வந்து கொண்டிருந்தனர். வழியெங்கும் மழை பெய்ததால் உண்டான சகதி. சரளா சறுக்கி விழுந்து விட்டாள். உடை முழுதும் சேறு. முழங்கையில் ரத்தம் கசிந்தது. அவள் அழுதாள். பாலு அவளைத் தூக்கி நிறுத்தி அன்போடு கண்களைத் துடைத்தான். சட்டைப் பையிலிருந்து ஒரு மிட்டாயை எடுத்து ''சரு! இதோ பார் மிட்டாய்!'' என்று நீட்டி அவளது அழுகையை மாற்றினான். அன்று அவனது இளம் உள்ளத்தைப் பிரதிபலித்த குரலில் கண்ட அதே பரிவை இன்றும் அவனது தொனியில் கண்டாள்.

பாவம் பாலு! தன் வயிற்றை ஒடுக்கி எத்தனை கஷ்டப்பட்டு இதற்காகப் பணம் சேர்த்திருப்பான்! வேண்டாம் என்று மறுத்தால் அவனது மனம் எவ்வளவு சங்கடப்படும்? ஆனால்.. கணவன் 'இது ஏது?' என்று கேட்டால்!....

''இதெல்லாம் எதற்கு, பாலு? ஏகப்பட்ட விலையாகி இருக்குமே!''

''மலிவுதான் சரளா! பணமுடை என்பதற்காக ஒருவர் இரண்டாயிரத்து ஐந்நூறுக்குக் கொடுத்து விட்டார்!''

''பாலு, கொஞ்சம் பொறு. சமையல்காரன்கூட ஊரிலில்லை. அடுப்பில் சாதம் குழைந்து விடும்; பார்த்து விட்டு வருகிறேன்'' என்று உள்ளே ஓடினாள் அவள். யோசிக்கச் சிறிது அவகாசம் வேண்டுமே!

அவள் தாயற்றவள் என்றால், பாலு தாய் தந்தை இருவரையுமே இழந்தவன். அவனது மாமா அவனை பி. ஏ. வரையில் படிக்க வைத்து விட்டார். அவன் 'மெட்ரிக்' பரீக்ஷையோடு நிறுத்திக் கொண்டதும், அவனது மாமாவைத் திடீரென்று டில்லிக்கு மாற்றினார்கள். ஆனால் பாலு அவர்களுடன் போகவில்லை. உள்ளூரிலேயே ஏதாவது உத்தியோகம் தேடிக் கொள்ளுகிறேன் என்று தங்கி விட்டான். சரளாவின் தந்தைக்குப் பாலுவின்மீது வெகு நல்ல அபிப்பிராயம். அவரது மனத்தில் என்ன தீர்மானம் இருந்தது என்பதை அவன் அறிவாள். ஆனால்!...

அவளது தகப்பனாருக்குப் போலீஸ் இலாகாவில் குமாஸ்தா உத்தியோகம். அன்றொரு நாள் வெள்ளிக் கிழமை. மாலையில் தந்தையும் மகளும் கபாலீச்வரன் சன்னதியிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தனர். வழியில் மழை பிடித்துக் கொண்டது. ஒரு கடையருகே ஒதுங்கி நின்றனர். சேற்றை வாரி இறைத்துக் கொண்டு அதிவேகமாக வந்த ஒரு மோட்டார் அவர்களுக்கெதிரே வந்து சடக்கென்று நின்றது. வண்டியிலிருந்த நடுத்தர வயதுள்ள மனிதர் அவளது தந்தையின் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டார். இருவரையும் வண்டியில் ஏறிக் கொள்ளும்படி கூறினார். கன்றை வெறித்துப் பார்க்கும் மாமிச வெறி கொண்ட ஓநாயைப் போல் அந்த ஆசாமி அவளைப் பார்த்த பார்வையில் அவளது உள்ளம் சிலிர்த்தது.

'' உம்முடைய பெண்ணா!'' என்று மிகுந்த வியப்புடன் கேட்டார் அவர், வண்டியைச் செலுத்திக் கொண்டே.

'' ஆமாம், ஸார்!'' என்று பணிவாகப் பதிலளித்தார் அவளது தந்தை.

மறுதினம் மாலையில் ஆபீஸிலிருந்து வந்த சரளாவின் தந்தை அவளது தலையில் பெருத்த பாறையைத் தூக்கிப் போட்டார்.

''நேற்று காரில் கொண்டுவந்து விட்டாரே! அவர்தான் டெபுடி கமிஷனர் ராமநாதன். அவரது காரியாலயத்தில்தான் நான் வேலை செய்கிறேன். நல்ல செல்வாக்குள்ள மனிதன். உன்னை அவருக்கு மணம் செய்து கொடுப்பதாக வாக்களித்து விட்டேன்!''

அவளுக்கு என்ன சொல்லுவதென்று புரியவில்லை. தந்தையின் முகத்திலும் குரலிலும் தொனித்த 'வேறு போக்கற்ற' பாவத்தின் அர்த்தம் அவளுக்கு விளங்கிவிட்டது. '' நான் விரும்பிச் செய்த முடிவல்ல இது! என் விதி அந்த மனிதனின் கையில் தானிருக்கிறது! ஆகையால்....'' என்று கெஞ்சியது அவரது சோகப் பார்வை.

ராமநாதன் மாத்திரம் குறுக்கிடாமலிருந்தால் அவளது வாழ்க்கை....

'' இன்னும் என்ன செய்கிறாய் சரளா..?'' என்று கேட்டுக் கொண்டே அறை வாசற்படி வரையில் வந்து விட்டான் பாலு. வைரப் பதக்கம் அவனது கையிலேயே இருந்தது.

'' ஒரே நிமிஷம்....'' என்றாள் சரளா.

'' அன்று எனது பி. ஏ. பரீக்ஷை முடிவு வெளியானதும் என் எதிர்காலத்தைப் பற்றிச் சொன்னாயே நினைவிருக்கிறதா, சரு?''

அதைக் கேட்டு, அவளது முகம் மாறியது. "பாலு! இப்போது நான் விவாகமானவள்! நீ புத்திசாலியல்லவா?"

பாலு தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு ஹாலுக்குச் சென்றான். வெளியே மழை சோ வென்று பெய்து கொண்டிருந்தது. கூடத்துக் கடிகாரத்தில் மணி ஏழு அடித்தது. சரளா தான் செய்ய வேண்டியதை நிர்ணயித்து விட்டாள். 'பாலுவுக்கும் ஏமாற்றம் கூடாது. அவளுக்கும் துன்பம் கூடாது. நகையை வாங்கிப் பெட்டியில் வைத்துப் பூட்டி விடவேண்டும். கணவனின் கண்ணில் படாமல் அவன் வருவதற்குள் பாலுவுக்குச் சாப்பாடு போட்டு அனுப்பி விட வேண்டியது!'



இலையைப் போட்டு விட்டு அவனைக் கூப்பிட்டாள். ஆனால் அந்தக் கபடமற்ற பைத்தியக்காரன், "இதற்குள் என்ன சாப்பாடு சரு. உன் கணவரும் வரட்டுமே!" என்றான். அவள்மெல்லவும்மாட்டாமல் விழுங்கவும் மாட்டாமல் தவித்தாள்.

அவள் சங்கடப்பட்டுக்கொண்டே கூறினாள்: "பாலு! காரணமாகத்தான் சொல்லுகிறேன்....நீ கொஞ்சம் சீக்கிரமாகச் சாப்பிட்டு விட்டு அவர் வருவதற்கு முன்னால்.."

அவள் பேச்சை முடிக்கவில்லை. ஆனால் அவன் விஷயத்தைப் புரிந்து கொண்டான். அவனது உதட்டில் ஒரு பரிதாபப் புன்னகை தோன்றியது. அவன் நெடுமூச்செறிந்தான்.

"சரளா, பயப்படாதே! என் உயிர் போவதானாலும் உன்னைச் சங்கடத்தில் ஆழ்த்தமாட்டேன்....! இந்தா, இதை மட்டும் வாங்கி உன் கழுத்தில் போட்டுக் கொள்! ஒருமுறை என் கண்களால் பார்த்துவிட்டு ஓடியே போய் விடுகிறேன். பிறகு இந்தப் பக்கமே வரமாட்டேன்!"

அவனது பரிதாபகரமான வார்த்தைகள் அவளது இதயத்தை வேதனை செய்தன. ஒரு அசட்டுச் சிரிப்புடன், "நீ சாப்பிட்டு விட்டுத்தான் போகவேண்டும் பாலு! புடலங்காய்க் கறி என்றால் உனக்குப் பிடிக்குமே!...." என்று உதட்டில் புன்னகையும் கண்களில் நீர்த்திரையுமாகக் கூறிக் கொண்டே அந்த மாலையை வாங்குவதற்காக இரண்டாம் முறையாகக் கையை நீட்டினாள்.

"பூம் பூம் பூம்!"

வாசலில் மோட்டார் ஹாரனின் சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து முன்புறத் தோட்டத்துக் கதவு திறக்கப்படும் ஓசை. அவள் துணுக்குற்றாள். நெஞ்சு படபடத்தது. கணவனுடைய குரல் கேட்டது! பொறியில் அகப்பட்ட எலியைப் போல் நடுநடுங்கினாள் அவள். அவளது அளவுக்கு மீறிய கலவரத்தைக் கண்டு திகைத்தான் பாலு! தோல் பையை எடுத்து அவனது கைகளில் திணித்து, பங்களாவுக்குப் பின்புறமாகக் கையைக் காண்பித்து "உம் சீக்கிரம், சீக்கிரம் போய் விடேன்!" என்று கெஞ்சினாள் அவள். கொட்டுகிற மழையிலும், இருட்டிலும், தனது அன்பளிப்புப் பொருளைக் கொடுக்க முடியவில்லையே என்ற ஏக்கத்துடன் பின்புற வழியாக அவன் ஓடி மறைந்தான்.

கனமான பாதரக்ஷைகள் தட் தட்டென்று ஒலிக்க உள்ளே நுழைந்தார் ராமநாதன். திரு திருவென்று விழித்துக் கொண்டு நின்ற மனைவியைக் கண்டதும் நாற்புறமும் சந்தேகத்தோடு ஒரு நோட்டம் விட்டார். பிறகு, "என்ன அது?" என்று அதட்டினார்.

அவளது சப்தநாடியும் ஒடுங்கி விட்டது. "ஒன்றுமில்லை.... திடீரென்று...."

"திடீரென்று?...."

"ஏதோ ஓசை கேட்டாற் போலிருந்தது..பயந்து விட்டேன்!" என்று ஏதோ சந்தர்ப்பம் தெரியாமல் உளறி விட்டாள் அவள்.

"ஓசை கேட்டதா!.... எங்கே? எந்தப் பக்கம்?" என்று மீண்டும் அதட்டினார் அவர்.

அவள் பதில் பேசவில்லை. ஆனால் ராமநாதனின் கழுகுப் பார்வை தற்செயலாக வீட்டுக்குப் பின்புறம் சென்றது. திறந்து கிடந்த பின்புறக் கதவுக்கப்பால் ஊன்றிக் கவனித்தார். வான வீதியில் வெட்டிய ஜோதி மின்னலின் ஒளியில் காம்பவுண்டு சுவருக்கு மேல் ஒரு மனித உருவம் தாவிக் குதிப்பதைக் கவனித்து விட்டார்!

அடுத்த விநாடி வேட்டை நாயைப் போல் பாய்ந்தார் ராமநாதன். ஒரே தாண்டாகத் தாண்டிக் காம்பவுண்டுச் சுவரை அணுகினார். கண்ணை மூடித் திறப்பதற்குள் சம்பவங்கள் நிகழ்ந்தன. பயத்தினால் சரளாவுக்குக் கை கால்களைக்கூட அசைக்க முடியவில்லை. என்ன நடக்கிறதென்று புரிந்து கொள்ளக்கூடச் சக்தியின்றி மூளை ஸ்தம்பித்துவிட்டது.'டமீர்' என்று ஒரு துப்பாக்கிச் சத்தம்! 'அம்மா!' என்று ஒரு அலறல். பின்னர் நிசப்தம்!

சிறிது நேரத்துக்கெல்லாம் டெபுடி கமிஷனர் பரபரப்புடன் வீட்டுக்குள் நுழைந்தார். ஏதோ கேட்க வேண்டும் போல் இருந்தது அவருக்கு. "அப்பால் நகர்ந்து போ!" என்று அவளைத் தள்ளிக் கொண்டு கூடத்துக்கு ஓடி டெலிபோனைக் கையில் எடுத்தார் அவர். சரளா உற்றுக் கேட்டாள்.

"இன்ஸ்பெக்டர் இரவியமா? நான் ராமநாதன் பேசுகிறேன்..... ஆமாம்!...... இரண்டு கான்ஸ்டேபிள்களை அழைத்துக் கொண்டு உடனே ஓடி வா!..என் வீட்டுக் காம்பவுண்டுக்கு அருகில் ஒரு திருடனைச் சுட்டுத் தள்ளியிருக்கிறேன்!....என்ன?.. உயிர் இருக்கிறது. கையோடு ஆம்புலன்ஸுக்கும் ஏற்பாடு செய்து விட்டு..சுக்சுக்சு! நான்ஸென்ஸ்! அதெல்லாம் இங்கே வந்து பேசிக் கொள்ளக் கூடாதா!"

சரளாவுக்குப் பகீரென்றது. டெலிபோனைத் தட்டென்று வைத்து விட்டு ராமநாதன் கூண்டுப் புலி போல் ஹாலில் மேலும் கீழும் உலாவிக் கொண்டிருந்தார்.

அடுத்த ஐந்தாவது நிமிஷம் பின்புறத்து வீதி அல்லோல கல்லோலப்பட்டது! மோட்



**"ஆர்மோனியத்தை இப்படி அஜாக்கிரதையாகப் போட்டு வைத்திருக்கிறீரே, யாராவது எடுத்துக்கொண்டு ஓடினால் என்ன செய்வீர்?"**

**"பார்த்தும், பார்க்காததுபோல் சும்மா இருந்து விடுவேன்!"**

---

டார் கார்களும் ஆம்புலன்ஸும் ஜனக் கூட்டத்தின் குரலுமாக ஒரே குழப்பம்! அவளுக்கும் அங்கே போய்ப் பார்க்க வேண்டும் போல் இருந்தது. ஆனால், "உள்ளேயே கிட! எட்டி கிட்டிப் பார்க்கப் போகிறாய்!" என்று உத்தரவு போட்டு விட்டு அவசரமாக வெளியேறினார் ராமநாதன்.

சரளாவின் நெஞ்சு பிளந்து விடும் போல் இருந்தது. ஆவலோடு பார்க்க வந்த பாலுவுக்கு ஆபத்து! அந்த நகையைக் கொடுக்க வேண்டுமென்று வந்த அவனது ஆவலைக்கூட அவள் நிறைவேற்ற வில்லை! தன் தலையே போய் விடுவது போலப் பயந்து கொண்டு அவனை நிற்கவொட்டாமல் 'ஓடு ஓடு!' என்று விரட்டினாள்! அவனது தலைக்கே உலை வைத்து விட்டாள்! அவன் பிழைப்பானா?

அநாதை பாலுவுக்காக அவளது உள்ளம் கசிந்துருகி அழுதது. "அவன் ஒரு திருடனல்ல. எனது பால்ய நண்பன்! ஒரு பாவமுமறியாதவன்!" என்று கணவனிடம் சொல்லி விட வேண்டும் என்று துடித்தது அவளுக்கு.

'என்ன ஆகும்? என்ன ஆகும்?' என்ற தவிப்போடு ஜன்னலருகிலேயே நின்று கொண்டிருந்தாள் அவள்.

இரவு சுமார் பத்து மணியிருக்கும். கான்ஸ்டேபிள் 301 அங்கே வந்தான்.

"ஐயா வரக் கொஞ்சம்நேரமாகும். என்னை இங்கே பங்களாக் காவலுக்கு அனுப்பி யிருக்கிறாரு" என்றான்.

அவள் அவனை ஆவலோடு கேட்டாள்:

"இப்போது ஒரு ஆசாமியை இங்கிருந்து ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனார்களே, என்ன ஆயிற்று என்று தெரியுமா உனக்கு?"

"நான் அங்கே இருந்துதானே வருகிறேன்! ஆள் பலே ஆசாமியம்மா! வாக்குமூலம் எடுக்கும் போது அவனுக்கு நல்லா நினைவிருந்தும் கூடத் தன்னைப் பற்றி ஒரு பேச்சு வெளி விடணுமே.... ஊஹூம்! நீ யாருடா, எந்த ஊருன்னு எத்தனையோ கேட்டுப்பார்த்தாங்க. குண்டுபட்டு உயிரைத் தின்னுகிட்டிருக்கிற அந்த நேரத்திலுங்கூடச் சிரிச்சுக்கிட்டே, 'நாடோடிக்கு ஊரேது பேரேது!' என்று தத்துவம் பேசினானென்றால் அவன் மனசு எப்படிப்பட்டதாயிருக்கணும் பாருங்க..!"

'சரளா, பயப்படாதே! என் உயிர் போவதானாலும் உன்னைச் சங்கடத்தில் ஆழ்த்த மாட்டேன்!' என்று பாலு கூறிய வார்த்தைகள் அவளது நினைவுக்கு வந்தன. அவளுக்குத் தீங்கு நேரிடக் கூடாதென்று அவன் வாக்குமூலம் கொடுக்கவில்லை! துக்கத்தின் பாரத்தினால் இருதயம் கனத்தது. மூச்சு முட்டுவது போலிருந்தது. கம்மிய குரலில், "அப்புறம்....!" என்று கேட்டாள் அவள்.

"அப்புறம் என்ன! அவன் சரியான திருட்டுப் பயல்தான்!"

"யாரைத் திருடன் என்கிறாய்?" என்று சீறினாள் அவள்.

"ஹூம், நீங்க ஒண்ணு! அவனுடைய தோல் பையைச் சோதனை போட்டாங்க. அதிலே இரண்டு கந்தல் துணிகளுக்கு மத்தியிலே ஒரு வைர அட்டிகையை ஒளிச்சு வச்சிருந்தான்! இந்தப் பிச்சைக்காரப் பயலுக்கு அந்த நகை திருடாமல் எப்படிக் கிடைக்குமாம்! 'உனக்கு இந்த நகை ஏதடா? இந்தப் பங்களாக் காம்பவுண்டுக்குள்ளே ஏன் நுழைஞ்சே?' என்று எவ்வளவு கேட்டும் உயிர் போகிறவரைக்கும் மூச்சுவிடவே இல்லையே!"

"ஆங்!....உயிர் போய் விட்டதா!"

"போய் அரைமணி நேரமாவுது, அம்மா!"

"பாலு!...."

சரளாவின் அடித் தொண்டையிலிருந்து இதயத்தைக் கிழிக்கும் ஒரு வேதனைக்குரல் வெளிப்பட்டது. நெற்றிப் பொட்டு ஜிவ் ஜிவ்வென்று தெறித்தது. தலை கிர்ரென்று சுற்றியது. தாங்கிப் பிடிப்பாரில்லை. தடாலென்று தரையில் சாய்ந்தாள்.

இதே சமயம் ராமநாதன் உள்ளே வந்தார். கான்ஸ்டேபிள் வேகமாக ஓடிப்போய் மூன்றாவது வீட்டிலிருந்த டாக்டரை அழைத்துக் கொண்டு வந்தான்.

அவளது கண்கள் மூடியிருந்தன. வாய் மட்டும் முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

"சொல்லிவிடு!..எனக்காக ஒளிக்க வேண்டாம்!....புடலங்காய்க் கறி உனக்கு ரொம்பப் பிடிக்குமே! சாப்பிட மாட்டாயா?"

டாக்டர், ராமநாதனைப் பார்த்து முறுவலித்தார். "இந்த நிலையிலும்கூட உங்கள் ஆகார விஷயத்தில் உங்கள் மனைவிக்கு எத்தனை அக்கறை!...." என்று கூறிக் கொண்டே அவளைப் பரிசோதித்தார்.

மூர்ச்சை தெளிவதற்கு ஊசி போட்டு விட்டுப் புறப்படுகையில் அவர், "இவர்களுக்கு இது நாலாவது மாதம் என்று நினைக்கிறேன். அதிர்ச்சி ஏற்படாமல் பார்த்துக் கொள்ளுங்கள்! பயமில்லை!" என்றார்.

டெபுடி கமிஷனரின் கடுமையான முகத்திலும்கூடப் புன்னகை தவழ்ந்ததைக் கண்டு அதிசயப்பட்டான் கான்ஸ்டேபிள் 301.




கடலின் பேரிரைச்சலோடு! இது வரையில் போட்டி யிட்ட கணக்கற்ற மனித ஆரவாரமெல்லாம் மறைந்து அங்கே நிசப்தம் நிலவியது. அந்தப் பயங்கர அமைதியைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் இன்னும் அங்கேயே தன்னை மறந்த நிலையில் அமர்ந்து கொண்டிருந்தார் பிரபல சினிமா டைரக்டர் நீலமேகம்.

அவர் மன அமைதியைத் தேடிக் கடற்கரைக்கு வந்தார். ஆனால், மணி ஏழரை ஆகியும் அவர் நாடி வந்த அமைதி அவர் உள்ளத்துக்குக் கிட்டவில்லை. மனத்தில் இருக்கும் பிரச்னைக்கு ஒரு முடிவு கண்டால் தானே மனம் சமாதானம் அடையும்?

டைரக்டர் நீலமேகம் ஆயிரக்கணக்கில் செலவு செய்து 'நிராசை' என்ற படத்தைத் தயாரிக்கத் திட்டமிட்டிருந்தார். படப்பிடிப்பும் ஆரம்பமாகிக் கொண்டிருந்தது. அது ஒரு அற்புதமான காதல் கதை.

சிறு வயது முதல் ஒன்றாகப் பழகி அன்பு கொண்டு வந்த சிறுவனும், சிறுமியும் தங்கள் பருவ காலத்தில் 'காதல்' என்ற புனிதமான காந்த சக்தியினால் கவரப்பட்டு விட்டனர். அத் தருணத்தில் விதியின் சூழ்ச்சியினால் இளம் காதலர் பிரிக்கப்பட்டு விட்டனர். அதுவும் என்றுமே ஒன்று சேராத நிலையில்! இந்தக் கதையை நீலமேகமே எழுதி அவரே 'டைரக்ஷன்' செய்து கொண்டிருந்தார்.

ஆனால், என்ன துரதிர்ஷ்டமோ, அந்தப் படத்தில் வரும் கதாநாயகிக்குப் பின்குரலுக்காக ஒப்பந்தம் செய்யப் பட்டிருந்த பாடகி திடீரென்று இறந்து விட்டாள். இந்த எதிர்பாராத தாக்குதல் நீலமேகத்துக்குப் பெரிய அதிர்ச்சியைக் கொடுத்தது. இதற்காக அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகள் அவர் உள்ளத்துக்குத் திருப்தியளிக்கவில்லை. தமது இதயத்தின் நிராசையைப் பாட்டின் மூலம் வெளிப்படுத்தும் பாடகிக்காக அவர் அலைந்து திரிந்து கொண்டிருந்தார். அதனால் படப் பிடிப்பும் வெகு நாட்கள் தடைப்பட்டு வந்தது.

இந்த நிலையில் அவர் மனம் அமைதியை இழந்து தவித்தது. தம் மனக் குழப்பம் கொஞ்சமாவது குறையட்டும் என்று கடற்கரைக்கு வந்தவர் நேரம் போவதே அறியாது சிந்தனையில் ஆழ்ந்து விட்டார். அவருக்கு இருந்த பொறுமை அவர் கார் டிரைவருக்கு இல்லை. எஜமானரைக் கூப்பிடும் சாக்கில் கார் 'ஹாரனை'ப் பிடித்துச் சற்றுப் பலமாகவே அழுத்தினார் டிரைவர்.

அப்போதுதான் தம் உணர்வு வந்த டைரக்டர் எழுந்திருக்க முயன்றார். அச் சமயத்தில் எங்கிருந்தோ ஒரு பெண் சோக கீதம் இசைப்பது கடற் காற்றிலே மிதந்து வந்து அவர் காதைத் தாக்கியது.

நீலமேகம் எப்படிப்பட்ட குரலுக்காக இதுவரையில் காத்திருந்தாரோ அதையே ஒத்திருந்தது அந்தப் பாட்டு. மீண்டும் பாட்டு தொடர்ந்தது. தன் நெஞ்சத்தின் உணர்ச்சிகளை யெல்லாம் பாட்டின் மூலம் வெளிப்படுத்தும் அந்தப் பெண் யார்? அவள் எங்கு அமர்ந்திருக்கிறாள்? நீலமேகம் எழுந்து குரல் வந்த திசையில் தம் பார்வையைச் செலுத்தினார். அதே சமயம் அவர் பார்த்த இடத்திலிருந்து ஒரு இளம் பெண் எழுந்து நின்றாள். ஒருகணம்தான். அடுத்த கணம் கடலை நோக்கி வேகமாக நடந்தாள்.

கடலிலே விழும்படி அவளுக்கு என்ன துன்பம் நேர்ந்து விட்டது? தம்மை மறந்து அந்த யுவதியையே பார்த்துக் கொண்டிருந்தார் டைரக்டர். கரைக்கும் கடலுக்கும் இரண்டே அடிதான்! ஒரே நிமிஷம்; கடலின் அலைகளோடு கலந்து விடுவாள் அந்தப் பெண்! இதை நினைத்ததும் அவர் உடல் சிலிர்த்தது. ஒரே தாவாகத் தாவி அந்தப் பெண்ணைப் பிடித்து விட்டார் நீலமேகம்.

எதிர்பாராத இந்தத் தாக்குதலைக் கண்டு அயர்ந்து விட்டாள் அந்தப் பெண்மணி. அவருடைய பிடியிலிருந்து நழுவி ஓட முயன்றாள் அவள். ஆனால் கிழவராக இருந்தாலும் அவர் பிடி உடும்புப் பிடியாக இருந்தது.

"ஐயா! இப்போது எதற்காக என்னைத் தடுக்கிறீர்கள்? இப்புவியில் வாழ முடியாத நான் மரணத்தின் மூலமாகவாவது அமைதியைக் காணலாம் என்று எண்ணினேன். அதையும் நீங்கள் தடுக்கிறீர்கள். ஐயா! தயவுசெய்து என்னை விட்டுவிடுங்கள். கடலைப் போலக் குமுறிக் கொந்தளிக்கும் உள்ளத்தோடு என்னால் வாழ முடியாது!"—தன் இரு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுதாள் அந்தப் பெண். அவள் அழுத காட்சி சினிமாக் கதை 'நிராசை'யில் வரும் கதாநாயகி அழுவது போலவே இருந்தது நீலமேகத்துக்கு. அதைவிட இது இயற்கையாகப்பட்டது அவருக்கு.

"அம்மா! பிறப்பதும் இறப்பதும் நம் கையில் இல்லை. அது இறைவன் சித்தம்! இருட்டி வெகு நேரம் ஆகி விட்டது. நாம் இங்கே பேசுவது சரியல்ல! அதோ கார் நிற்கிறது. எழுந்து வாம்மா, நாம் வீட்டுக்குப்

போகலாம். மற்ற விஷயங்களை அங்கு போய்ப் பேசிக் கொள்ளலாம்'' என்று அன்புடன் அழைத்தார் டைரக்டர் நீலமேகம்.

''ஐயா! உங்கள் அழைப்புக்கு என் நன்றி! ஆனால் நான் இங்கு வந்ததெல்லாம் சாவதற்கேயன்றி, வாழ்வதற்கல்ல! நான் வாழ முடியாது! வாழக் கூடாது! இதுதான் கடவுள் விருப்பம்!'' என்று கூறிய அவள் குரலிலேதான் எத்தனை நிராசை!

''அம்மா! நீ நினைப்பது போல நான் நீசனல்ல! என்னைப் பார். உன் தந்தையைப் போல நினைத்துக் கொள். கலங்காதே. எழுந்து வாம்மா! நீ இன்னும் வாழ வேண்டுமே தவிர, சாகக் கூடாது: பயமில்லாமல் என்னோடு வா!'' அவருடைய பேச்சும் முகமுமே கண்யமுள்ள 'பெரிய மனிதர்' என்று எண்ணும்படி இருந்தன.

''சரி! என் வாழ்வில் இன்னும் என்னென்ன நடக்கவிருக்கிறதோ?'' என்று கூறிவிட்டு விருப்பு வெறுப்பற்ற நிலையில் அவரைத் தொடர்ந்து சென்று காரில் அமர்ந்து கொண்டாள் அந்தப் பெண்.

அரை மணி நேரத்தில் ஒரு பெரிய பங்களாவின்முன் போய் நின்றது கார். நீலமேகம் தம்மோடு வந்த பெண்ணைத் தம் வீட்டிலுள்ளவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

அடுத்தநாள் காலை பத்து மணிக்கு அவள் இருக்கும் அறைக்கு வந்தார் டைரக்டர்.

''உன் பெயர் என்ன அம்மா?''

''சரோஜா!''

''சரோஜா! நான் 'நிராசை' என்ற படத்தின் டைரக்டர். அந்தப் படத்தில் பாட ஒப்பந்தம் செய்யப்பட்டிருந்த பாடகி எதிர்பாராதவிதத்தில் காலமாகி விட்டார். மேலும் நான் தேர்ந்தெடுத்த பாடகிகள் எனக்குத் திருப்தி அளிப்பதாக இல்லை! ஆனால் நேற்றைக்கு நீ கடற்கரையில் பாடினாயே? அந்தப் பாட்டு எனக்கு மிகவும் பிடித்து விட்டது! காலஞ்சென்ற பாடகியின் ஸ்தானத்தில் உன்னை அமர்த்த நான் விரும்புகிறேன். நீ மறுக்க மாட்டாய் என்றும் நம்புகிறேன்!'' என்று சொல்லிவிட்டு நிறுத்தினார் நீலமேகம்.

''டைரக்டர் ஸார்! நான் நாலுபேர் எதிரில் கூடப் பாடியதில்லையே! இந்நிலையில் படத்துக்கு என் பாட்டு பொருந்துமா?''

''சரோஜா! அது உனக்குத் தெரியாது! நீ பாடும் குரல் உன் உள்ளத்தின் ஆழத்திலே இருந்து வருகிறது. ஒரு பெண் தன் இதயத்தின் ஏமாற்றத்தைச் சோக கீதமாக இசைத்தால், உண்மையான ரசிகன் எவனும் உணர்ச்சி வசத்தில் ஆழ்ந்துவிடுவான்!''

அவர் குரலில் தொனித்த உறுதியைக் கண்டு மெதுவாகச் சிரித்தாள் சரோஜா.

''டைரக்டர் ஸார்! என் குரல் உங்களுக்குப் பிடித்திருந்தால் எனக்கு ஆட்சேபம் இல்லை. என்னை நீங்கள் அளவுக்கு மீறிப் புகழ்கிறீர்கள்; இதெல்லாம் எனக்கு மன வேதனையைத்தான் கொடுக்கிறது'' என்று அவள் வேதனையோடு கூறினாள்.

'நிராசை' வெள்ளித்திரையில் வெற்றியுடன் ஓடியது. சரோஜாவின் குரலைப் புகழ்ந்து கணக்கற்ற கடிதங்கள் வந்தன!

சரோஜாவுடன் அவள் உள்ளத்தை ஆராய அடிக்கடி பேசிப் பார்ப்பார் நீலமேகம். அப்போது எல்லாம் சரோஜாவின் முகம் பேச்சுக்கு ஏற்றவாறு விதம்விதமான பாவங்களைத் தோற்றுவிக்கும். அதைப் பார்க்கும்போது டைரக்டர் நீலமேகம் 'இவள் ஒரு சிறந்த நடிகையாக வரவேண்டியவள்' என்று மனத்துக்குள் எண்ணிக் கொள்வார்.

ஒருநாள் பேச்சுவாக்கில் சரோஜாவை நடிக்கும்படி கேட்டுவிட்டார் நீலமேகம். அதை அவள் எளிதில் ஒப்புக்கொள்ளவில்லை. எடுத்துக் கொண்ட முயற்சியில் முடிவில் வெற்றியே கண்டார் நீலமேகம்.

சரோஜா நடித்த முதல் படமே எதிர்பார்த்ததைவிட அதிக வெற்றியைக் கொடுத்தது. சோக நடிப்பில் திரை வானில் இணையற்ற மின்னும் நட்சத்திரமாக ஜொலித்தாள் சரோஜா. பணமும், புகழும் பெருமையும் அவளைத் தேடி வந்தன.

ஒரு நாள் டைரக்டர் நீலமேகம் சரோஜாவைத் தேடி வந்தார் அப்போது அவள் தன் அறையில் சிந்தனையே உருவாக அமர்ந்திருந்தாள். அவள் கையில் ஒரு பெரிய கவர் இருந்தது. சரோஜாவின் இரு கண்களும் கண்ணீரில் மூழ்கியிருந்தன.

''சரோஜா!....''

திகைப்புடன் நீலமேகத்தை நிமிர்ந்து பார்த்தாள் சரோஜா.

''சரோஜா! நான் உன்மேல் வைத்திருக்கும் அன்பு எத்தகையது என்பது எனக்குத்தான் தெரியும். என் மகளுக்கும் மேலாக உன்னை நினைக்கிறேன். நீ இப்போது அழுவது என் மனத்தைச் சங்கடப் படுத்துகிறது. உன் உள்ளத்தை வாட்டும் காரணம் என்ன வென்று சொன்னாலாவது அதைப் போக்க ஏதாவது வழி செய்யலாம்!'' என்று பரிவுடன் கூறினார் நீலமேகம்.





''டைரக்டர் ஸார்! என் துயரைப் போக்க இறைவனாலும் இயலாது! நான் பெண் ஜன்மம் எடுத்த நேரம் அப்படி! இன்றைக்குத்தான் நான் அழுவதாக நீங்கள் நினைத்தால் அது தவறு! நேரம் கிடைக்க போதெல்லாம் என் நெஞ்சின் சுமை குறைய அழுவேன். ஆனால் என்ன அழுதும் அமைதி கிட்டுகிறதா உள்ளத்துக்கு?.. என்னுடைய கதையை வாயால் சொல்ல முடியாது. இந்தக் கவருக்குள் இருக்கும் கையெழுத்துப் பிரதியைப் படித்தால் என்னைப் பற்றித் தெரிந்து கொள்ளலாம்!'' என்று கூறி விட்டுத் தான் வைத்திருந்த கவரை நீலமேகத்திடம் கொடுத்தாள் சரோஜா.

டைரக்டர் அவள் கொடுத்த கையெழுத்துப் பிரதியை மிகுந்த ஆவலுடன் பிரித்துப் படிக்க ஆரம்பித்தார்:

** ** **

சரோஜா ஏழைக் குடும்பத்தில் பிறந்தவள். ஏழையாகப் பிறந்துவிட்ட போதிலும், அழகிலும் ஆரோக்கியத்திலும் செல்வந்தர் வீட்டுப் பெண் போல இருந்தாள் சரோஜா. அந்த வருஷம்தான் உள்ளூர் உயர்நிலைப் பள்ளியில் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை எழுதியிருந்தாள் அவள்.

தன் தோழி கமலத்தின் வீட்டுக்குத்தான் மாலைப் பொழுதில் விளையாடச் செல்வாள் சரோஜா. கமலம் சுமாரான பணக்காரி. அவளுடைய அண்ணன் சம்பத் பி. எஸ்ஸி. பரீட்சை எழுதி விட்டு விடுமுறையில்தன் தகப்பனரின் வீட்டுக்கு வந்திருந்தான். தினமும் தன் தங்கையோடு விளையாட வரும் பெண்களில் சரோஜாவை முதன் முதலாகப் பார்த்ததுமே தன் மனத்தைப் பறிகொடுத்துத் தவித்தான். அவளுடன் பேச ஒரு நல்ல சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிக் காத்துக் கொண்டிருந்தான் சம்பத்.

அவனுக்கு வாய்த்த சந்தர்ப்பம்தான் எப்படிப்பட்டது!

வழக்கம் போல் சரோஜா அன்று மாலையும் கமலாவின் வீட்டுக்கு விளையாடச் சென்றாள். அங்கு ஏற்கனவே சில தோழிகள் வந்திருந்தனர். எல்லாப் பெண்களும் சேர்ந்து கண்ணாமூச்சி விளையாடுவதென்று தீர்மானமாகி, முதலில் சரோஜாவின் கண்கள் கட்டப்பட்டன. கை தட்டும் சத்தத்தைக் கொண்டு ஆளைக் கண்டு பிடிக்க வேண்டும்.

சரோஜா சுற்றிச் சுற்றி வந்தாள். கைதட்டல் சத்தம் அடுத்தடுத்துக் கேட்டும் ஒருவரும் அவளிடம் அகப்பட்டுக் கொள்ள வில்லை. ஆனால் அவள் விடாமல் உற்சாகமாகத் தொடர்ந்து எல்லோரையும் பிடிக்க முயன்ற வண்ணமாக இருந்தாள். ஆனால் இலேசில் யாரும் அகப்பட வில்லை. கடைசியில் யாரோ சரோஜாவின் கையில் அகப்பட்டார்கள்.

''அகப்பட்டுக் கொண்டாயா? கட்டை அவிழ்த்து விடு! ஏன் சும்மா நிற்கிறாய்?'' என்று சொல்லிக் கொண்டே அவளைப் பலமாக ஒரு உலுக்கு உலுக்கினாள் சரோஜா.

''ஏன் பேச மாட்டேன் என்கிறாய், கமலா! தோல்வி உன் வாயை அடைத்து விட்டதோ?'' என்று கேட்டுக் கொண்டே அவள் தலையில் ஒரு குட்டு வைத்தாள்.

கட்டவிழ்க்கப்பட்டதும் கண்ணைக் கசக்கிக் கொண்டே எதிரே பார்த்தாள் சரோஜா. அடுத்தகணம் அவள் இதயமே நின்று விடும் போல ஆகிவிட்டது, எதிரே இருந்த ஆடவனைப் பார்த்ததும்.

''தோல்வியா? எனக்கா?'' என்று அமைதியாகக் கேட்டான் சம்பத்.

'இவரையா கமலா என்று எண்ணிப் பிடித்தோம்? அதோடு நில்லாமல் பேசவில்லையென்று தலையில் வேறு குட்டு வைத்தோமே?' இதை நினைத்ததும் அவள் உடல் நடுங்கியது.

''உங்களை.... உங்களை.... நான்.. கமலாவென்று.. தெரியாமல் முட்டாள்தனமா.... என்னை மன்னித்து விடுங்கள்!'' என்று உளறிக் கொட்டினாள் சரோஜா.

''முட்டாள்தனமான காரியமா? அதை நீ செய்ய வில்லை, சரோஜா! நான்தான் செய்தேன்!'' என்றான் சம்பத்.

'என்ன?' என்று கேட்கும் பாவனையில் அவனை ஏறிட்டு நோக்கினாள் சரோஜா.

''உன் கண்களின் கட்டை அவிழ்த்து விட்டதைப் போன்ற முட்டாள்தனமான செய்கை வேறென்ன இருக்கப் போகிறது? இன்னும் சிறிது நேரம் அவிழ்க்காமல் இருந்திருந்தேனானால் உன் மலர்க் கரத்தால் இன்னும் இரண்டு குட்டுகள் கிடைத்திருக்கும்'' என்று கூறி விட்டு விஷமப் புன்னகை புரிந்தான் சம்பத்.

'இத்தனை பொல்லாதவரா இவர்?' என்று எண்ணியதும் அவளுக்குச் சம்பத்தின் மீது கோபம்கூட வந்தது.

''நாங்கள் விளையாடும் இடத்துக்கு நீங்கள் ஏன் வர வேண்டும்?'' என்று அவனிடம் பொய்க் கோபத்துடன் கேட்டாள் சரோஜா.

''நான் முகம் கழுவிக் கொண்டுவந்தபோது என் துண்டைக் காணவில்லை! ஜன்னல் அருகில் வந்து நின்ற போது, நீ





முறையான
உடைகள்
அல்லது




**டாடா 501 ஸ்பெஷல்**

**அவைகளை**
**சிறப்பாக**
**சலவை செய்கிறது**




TATA PRODUCT

சுதேசிப் பொருள்களை வாங்கி இந்தியத் தொழில்களை ஆதரியுங்கள்.

டாடா ஆயில் மில்ஸ்

அதைக் கட்டிக்கொண்டு அங்கும் இங்குமாய் அலைவது தெரிந்தது. நான் அதை வாங்கிக் கொண்டு போகலாம் என்று வந்தேன். நீயானால் என்னைப் பிடித்துக் கொண்டாய்!'' என்று குறும்புடன் சொன்னான் சம்பத். சரோஜாவால் பேசவே முடியவில்லை.

''சரோ! அங்கே என்னடி செய்கிறாய்?'' என்று தோழிகள் புடைசூழ வந்தாள் கமலா. சம்பத் அங்கிருந்து சாமர்த்தியமாக நழுவிப் போய் விட்டான்.

''செய்கிறேன், சட்டியும் பானையும்! என்னைத் தனியே விட்டு விட்டு நீங்கள் எல்லாரும் எங்கே தொலைந்தீர்கள்?'' என்று கோபத்தோடு கேட்டாள் சரோஜா.

''மன்னித்துவிடு, சரோ! நாங்கள் வேண்டுமென்று போக வில்லை. தண்ணீர் குடிக்க வீட்டுக்குள் சென்றோம். அங்கே அம்மா புடவைக்காரனிடம் பேசிக்கொண்டிருந்தாள். புடவைகளைக் கண்டதும் உன்னை மறந்து விட்டோம்! எங்கள் மீது கோபித்துக் கொள்ளாதே, சரோ!'' என்று கெஞ்சும் பாவனையில் வேண்டினாள் கமலா

அதற்குப் பிறகு சரோஜாவுக்கு விளையாட்டில் மனமே செல்லவில்லை. சீக்கிரமாகவே வீட்டுக்கு வந்து விட்டாள். அன்றிலிருந்து சம்பத்-சரோஜா காதல் வளர்பிறை போல வளர்ந்து வந்தது.

ஒரு நாள் காலை கமலாவைச் சந்திக்க அவள் வீட்டுக்குச் சென்றாள் சரோஜா. அப்போது கமலா குளித்துக் கொண்டிருப்பதாகக் கேள்விப்படவே, கமலாவின் அறையில் சென்று ஒரு நாற்காலியில் அமர்ந்து கொண்டாள் சரோஜா.

அவளுடைய வாய் ஒரு பாட்டை இலேசாக முணு முணுத்தது. ''இதய வீணையை மீட்டி விட்டாயே, வா, வா!'' என்ற அடியை உல்லாசமாக இழுத்தாள் சரோஜா.

''அந்த இனிய கீதத்திற்கென் உள்ளம் ஏங்குதே, வா, வா!'' என்ற பாட்டின் அடியைக் கேட்டுத் திடுக்கிட்டு முன் பக்கம் திரும்பினாள் சரோ. அங்கே புன்னகை தவழ நின்று கொண்டிருந்தான் சம்பத்.

''சரோஜா! என் இதய வீணையை மீட்டும் சக்தி உன் தளிர் விரல்களுக்குத்தான் உண்டு! அதற்கு நான் இன்னும் இரண்டு வருஷங்கள் பொறுத்திருக்க வேண்டும்! எனக்காக நீ இந்த இரண்டு வருஷங்கள் காத்திருப்பாயா, சரோ?'' என்று குரல் தழுதழுக்க அன்போடு கேட்டான் சம்பத்.

''சம்பத்! உங்களுக்காக இரண்டு வருடமல்ல, இரண்டு யுகங்கள் கூடக் காத்திருக்கத் தயார். சம்பத்! என்மேல் இன்றுள்ள காதல் உங்களுக்கு என்றும் மாறுதல்லவா?''

''சரோ! என் அன்பின் ஒலி உன் உள்ளத்தில் எதிரொலிக்கும்போது, ஏன் இந்த வீண் சந்தேகம்? நான் இன்று மாலை சென்னைக்குப் புறப்படுகிறேன். இப்போதே உன்னிடம் விடை பெற்றுக் கொள்கிறேன். கட்டாயம் என் இதய வீணையில் எழும் இன்ப ஒலியாக நீ இருப்பாய் என நம்புகிறேன், சரோ!'' என்று உள்ளம் நெகிழக் கூறி விடை பெற்றுக் கொண்டான் சம்பத். அது முதற் கொண்டு சரோஜா இன்ப வானில் பறக்கலானாள்.

> என் தாய்த்திரு நாடே! உன் பொருட்டு நான் கந்தையை அணிவேன்: கூழைக் குடிப்பேன். உனக்குச் சேவை செய்வதைக் காட்டிலும் சிறந்த பாக்கியம் வேறு என்ன இருக்கிறது? —மாஜினி

இந்த நிலையில் சரோஜாவுக்கு வரன் தேடும் படலத்தில் ஈடுபட்டார் அவளுடைய தந்தை. இதைப் பார்த்து அவளுடைய மனம் சொல்லொணாத வேதனையை அடைந்தது. அதே சமயம், வந்த வரன்களெல்லாம் 'வரதட்சிணை' என்ற பெயரால் அவளை மணக்க மறுத்தபோது அவள் மனம் சற்று ஆறுதலும் திருப்தியும் அடைந்தது.

ஆனால், அந்தோ! அவளுடைய காதல் கோட்டையில் ஒருநாள் மின்னுமலே இடி விழுந்து விட்டது! அவளுக்காக ஒரு வரனை நிச்சயம் செய்துகொண்டு வந்து விட்டார் அவளுடைய அருமைத் தந்தை. பெரிய செல்வந்தராம். நல்ல குணவானும். அறுபது வயது வாலிபராம்! இந்தச் சேதியைக் கேட்டுச் சரோஜாவின் உள்ளம் தவியாய்த் தவித்தது. தணலில் இட்ட தளிர் போலக் கருகியது அவள் இதயம். தன் தந்தையிடம் கெஞ்சிக் கூத்தாடிப் பார்த்தாள் சரோஜா. அவர் செவி சாய்க்கவில்லை.

தன் தங்கைகளின் எதிர்கால வாழ்வுக்காகவும், தகப்பனாரின் மானத்துக்காகவும் அந்தப் பணக்காரக் கிழவரை மணக்கத் துணிந்து விட்டாள் சரோஜா.

கலியாணம் ஆனதிலிருந்து சம்பத்தின் நினைவு சரோவை அதிகமாக வாட்டி வதைத்தது. தன் ஒவ்வொரு சொல்லாலும், செய்கையாலும் தன்னை மணந்து கொண்டது எத்தனை கொடிய பாவம் என்பதைக் கிழவருக்கு உணர்த்தினாள் சரோஜா.

அப்போதுதான் அவரும் தன் செய்கையை நினைத்து அவமானம் அடைந்தார். அவருக்கு அடிக்கடி மாரடைப்பு வருவது வழக்கமாகையால், அன்று வந்த மாரடைப்பு அவர் உயிரையே கவர்ந்து சென்றது. சமுதாய முறைப்படி விதவையானாள் அபலை சரோஜா. தன் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு நாட்களை ஓட்டினாள் சரோஜா.

அன்று, சம்பத்துடன் பேசவைத்த முதல் சம்பவம் அவள் மனக் கண்முன் தோன்றி அவள் இதயத்தை ஈட்டிபோலத் துளைத்தது. எத்த நினைவை மறக்க முயன்றாளோ, அதே நினைவு மீண்டும் மீண்டும் அவள் சிந்தனையைச் சுற்றி வட்டமிட்டது! அவள் இருந்த அந்த மோன நிலையில் சம்பத் வந்து நின்றதைக்கூடக் கவனிக்கவில்லை!

''சரோ! இரண்டு நிமிஷமாக உன் எதிரிலேயே நிற்கிறேனே! என்ன சிந்தனை அப்படி?'' என்று கேட்டுக்கொண்டே அவள் கரங்களைப் பற்ற வந்தான் சம்பத்.

அவன் வரவைச் சற்றும் எதிர்பாராத சரோஜா, அவன் தன்னைத் தொடக் கூடாது

* * * * * * * * * * * * * * *

**"ஒரு தேசத்தை மற்றொரு தேசம் அடிமைப் படுத்துவதைப் போன்ற கொடுமை உலகத்தில் வேறு எதுவும் இல்லை. பெரிய வல்லரசுகள் சிறு நாடுகளின் சுதந்திரத்தில் தலையிடுவதை நிறுத்தும்வரை உலகத்தில் க்ஷேமமோ அமைதியோ ஏற்படாது."**

**—ஆப்ரஹாம் லிங்கன்**

* * * * * * * * * * * * * * *

என்பதற்காகத் துள்ளி ஓடினாள். இதைப் பார்த்துத் திகைத்து விட்டான் சம்பத்.

''என்ன சரோஜா, இப்படி ஓடுகிறாயே! ஏன் நான் உன்னைத் தொடக்கூடாதா?'' என்று கேட்டுக் கொண்டே பின்னும் அவள் அருகில் நெருங்கினான்.

''வேண்டாம் சம்பத்! உங்களுடைய புனிதமான கரத்தால் என்னைத் தொடாதீர்கள்!'' என்று சொல்லிவிட்டு விக்கி விக்கி அழ ஆரம்பித்தாள் சரோஜா.

அவள் அழுகையைக் கண்டு பதறிவிட்டான் சம்பத். அப்போதுதான் அவளை நன்றாக உற்று நோக்கினான். சரோஜாவின் தோற்றத்தைக் கண்டதும் அவன் மனத்தை இனம் புரியாத ஒரு கலவரம் சூழ்ந்தது.

''நான் நினைப்பது போலவே நீயும் எண்ணினால், நாம் விதியை வென்று வெற்றி காணலாம், சரோஜா!''

உணர்ச்சியோடு பேசினான் சம்பத்.

இந்த நிலையிலும் தன்னைத் தயங்காமல் ஏற்றுக்கொள்ள விரும்பும் சம்பத்தின் தூயக் காதலை நினைத்து அவள் நெஞ்சம் விம்மியது.

அவன் வந்து விட்டுப் போனதிலிருந்து, சரோஜாவின் உள்ளம் அலைகடலைப்போல ஆரவாரித்தது. 'அவர் சொல்வது போலவே நாம் நடந்தால் என்ன?' என்ற கேள்வி அவள் மனத்தில் எழுந்தது. அதற்கு விடை இன்னதென்று தோன்றவில்லை அவளுக்கு. தான் சம்பத்துடன் வாழ இசைந்து விட்டால், அவனுடைய வாழ்வு எப்படிச் சீர்குலைந்து பாழாகும் என்பதைக் கற்பனைக் கண்கொண்டு நோக்கியபோது சரோஜாவின் உடல் அச்சத்தால் நடுங்கியது.

''சம்பத்! என் மனச்சாட்சிக்கு எதிராக உங்களோடு வாழ நான் விரும்பவில்லை. தங்களுடைய மாசற்ற காதலுக்கு நான் ஏற்றவளல்ல. இந்தப் பிறவியில் நான் தங்களை அடைய முடியாத நிலையை விதி எனக்கு அளித்திருக்கிறது. இல்லை, இல்லை! இந்தச் சமுதாயம் அளித்திருக்கிறது! தங்கள் இதய வீணையை மீட்டும் தந்தியாக இருக்கத் தவம் இருந்தது என்னவோ உண்மைதான். ஆனால், விதி அதை விரும்பவில்லை! நீங்கள் சொல்வது போலச் சமுதாயத்தையும் விதியையும் மீறி வாழ என் பேதை மனம் ஒப்பவில்லை! இந்த அபாக்கியவதியை மன்னித்து விடுங்கள்! நான் போய் வருகிறேன்! —சரோஜா''

இப்படி ஒரு கடிதம் எழுதிச் சம்பத்துக்குக் கிடைக்கும் விதத்தில் செய்து விட்டு, இரவோடு இரவாக ஊரைவிட்டுப் புறப்பட்டு விட்டாள் சரோஜா. அங்கும் இங்குமாக அலைந்து இறுதியில் சென்னை வந்து சேர்ந்தாள். அதற்குள் அவள் பட்ட அநுபவங்கள் எத்தனையோ! வறண்ட பாலைவனக் காடாக இருந்த அவள் உள்ளத்தில், நீலமேகத்தின் அன்பினால் சிறு நீர்ஊற்றுத் தோன்றியது. அவருடைய கள்ளமில்லா அன்பினால் அவள் உள்ளம் சிறிது ஆறுதல் அடைந்தது.

* *

நீண்ட சிறுகதை போன்ற அந்தக் கையெழுத்துப் பிரதியைப் படித்து முடித்ததும், உணர்ச்சிப் பெருக்கினால் நீலமேகத்தின் கண்களில் நீர் நிரைந்து விட்டது.

''சரோஜா! உன் வாழ்க்கையைப் பற்றித் தெரிந்து கொண்டதிலிருந்து என் மனமே ஒரு நிலையில் இல்லை. நான் உன்னிடமிருந்து எதிர்பார்ப்பதெல்லாம் என்னைச் சொந்தத் தந்தை போல நீ எண்ண வேண்டும் என்பதே!'' என்று கூறிய நீலமேகம் அவளுடைய கையெழுத்துப் பிரதியுடன் விடை பெற்றுக் கொண்டார்.

ஒரு வாரம் கழித்து நீலமேகம் வந்திருந்த போது, அவர் எடுத்துச் சென்ற சரோஜாவின் கதையைத் திரைப்பட வசனமாக எழுதிக் கொண்டு வந்தார். அதைப் படித்து விட்டுச் சோகத்தோடு சிரித்தாள் சரோஜா.

நீலமேகம் தம் சாமர்த்தியத்தினால் அவளை 'இதய வீணை'யில் நடிக்கச் செய்து விட்டார். '''இதய வீணை'யைப் போன்ற மகத்தான வெற்றி தரும் படத்தை, நீலமேகம் இதுவரை தயாரித்ததில்லை'' என்று படாதிபதிகள் அனைவரும் அவரை ஒருமுகமாகப் பாராட்டினர்! படத்தின் உயிருக்கே சரோஜாவின் குரலும், இணையற்ற சோக நடிப்புமே காரணம் என்று பத்திரிகைகளெல்லாம் புகழ்ந்தன. படத்தின் முழு வெற்றிக்கும் சிகரமாக இருந்த சரோஜாவுக்குப் புகழ்மாலை சூட்ட அவள் வீட்டுக்குச் சென்றார் நீலமேகம். அவர் அங்கே கண்டது சரோஜாவின் உயிரற்ற உடலை!

அவளது கட்டிலில் கிடந்த கடிதத்தைப் பரபரப்போடு படித்தார் நீலமேகம்.

''டைரக்டர் நீலமேகம் அவர்களுக்கு, வணக்கம். நேற்றைய தினப் பத்திரிகையில் வெளி வந்த செய்திதான் என்னை இந்த முடிவுக்கு வரச் செய்தது. 'சம்பத் என்ற பைத்தியக்கார ஆஸ்பத்திரி டாக்டருக்கு இதய வீணை என்ற சினிமாவைப் பார்த்ததிலிருந்து புத்தி பேதலித்து விட்டது. 'சரோஜா! என் காதலி! என் மனைவியுங்கூட! என் இதய வீணையை மீட்ட என் சரோவால் தான் முடியும்!' என்று கூவிக் கொண்டே தெருவில் ஓடும் போது ஒரு லாரி மோதி ஸ்தலத்திலேயே மரணமடைந்தார்.'

''இந்தச் செய்தியைப் படித்ததும் என் மனம் பட்ட வேதனையை எழுத்தால் எழுத முடியுமா? நாங்கள் மறு உலகில் கட்டாயம் ஒன்று சேருவோம்! என் சொத்துக்களை 'மன நோய் வைத்தியசாலை'க்குச் சேர்ப்பித்து விடுங்கள். சரோஜா''

டைரக்டர் நீலமேகத்தின் கைகளிலிருந்து அவரை அறியாமல் நழுவிய கடிதம், சரோஜாவின் உயிரற்ற உடலில் விழுந்தது.




சமீபத்தில் நான் சென்னையிலிருந்து ஹைதராபாத்துக்குப் பயணமான போது, ரயிலில் எனக்கு ஒரு விநோதமான அனுபவம் ஏற்பட்டது. எத்தனையோ ரயில் அனுபவங்களைப் பற்றிய கதைகளை நீங்கள் படித்திருப்பீர்கள். அந்தக் கதைகளில் பெண்மணிகள் ஜாஜ்வல்யமாக வந்து போகும் விதத்தையும் நீங்கள் பார்த்திருப்பீர்கள்.

என் அனுபவத்திலும் ஒரு பெண்மணிதான் பங்கெடுத்துக் கொண்டாள். அதிலும் யுவதி. ஆனாலும் இது முற்றிலும் வேறான, விநோதமான அனுபவம்.

முந்தைய நாள் காலை ஆறு மணிக்குச் சூரியோதயம் ஆனதோ இல்லையோ, நான் அந்தப் பொழுதுக்குச் சரியாக சென்ட்ரல் ஸ்டேஷனில், 'ரிஸர்வேஷன் கௌண்ட'ருக்கு எதிரே நீண்ட 'க்யூ'வில் நின்று கொண்டிருந்தேன். மறுநாள் வண்டிக்கு முந்தையநாளே அதுவும் எக்கச்சக்கமான அந்தக் காலை ஆறு மணிப் பொழுதுக்கே—சென்று இடத்தை ரிசர்வ் செய்ய வேண்டும்.

பெண்மணிகளும் 'க்யூ'வில் வரிசையாக நின்று கொண்டிருந்தார்கள்.

எனக்கெதிரே அவள்..அந்த யுவதிதான் நின்று கொண்டிருந்தாள்!

அன்று வெள்ளிக்கிழமை. அதிகாலையிலேயே எழுந்து மங்கள ஸ்நானம் செய்திருப்பாள் போலிருந்தது. கேசத்தை ஆற்றிவிட்டு நுனியில் முடி போட்டிருந்தாள். உச்சந் தலைக்குச் சற்றுப் பின்னால், இரு ஒற்றைச் செவ்வந்தி மலர்களை மட்டும் சூடியிருந்தாள். ஏற்கனவே அவள் மேனி பொன் மேனி; ஸ்நானத்துக்குப் பிறகு அந்தப் பொன் மேனி பளபளத்தது. தளதளப்பும் இளமையும் ஒன்றுடன் ஒன்று இணைய நடுநடுவில் பச்சை மாந்துளிர்கள் பளிச்சிட, இலேசான மஞ்சள் வாயில் புடவையும், அதே கலரில் 'ஹைதராபாத் சோலி'யும் அணிந்திருந்தாள். கழுத்தில் ஒரு பொன் சங்கிலி. கரங்களில் கண்ணாடி வளையல்கள்.

ரயில் ஏறுவதற்கு முன்பு அங்கே நாங்கள் எல்லாரும் ஒரு ரயிலாக நின்றபோது —

என் பின்னால் நின்றுகொண்டிருந்த ஒருவர் இதுவரை இந்தியாவில் தான் கண்டு வந்த இடங்களின் மகிமையைப் பற்றி யெல்லாம் அளந்து கொண்டு வந்தார். பிறகு என்னைப் பார்த்து, "ஸார்! நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்றார்.

"ஹைதராபாத்துக்கு!" என்றேன் நான்.

"அந்த ஒரு இடம் தான் ஸார் நான் பார்க்கவில்லை. அடுத்த வருஷத் திட்டத்தில் அதைச் சேர்த்து விடுகிறேன்" என்றார் அவர்.

நான் "ஹைதராபாத்துக்கு" என்று சொன்ன கணமே அந்த யுவதி என்னைத் திரும்பிப் பார்த்தாள். அந்தப் பார்வையில் அவளும் ஹைதராபாத்துக்குத்தான் வருகிறாள் என்று தெரிந்து விட்டது.

"நீங்கள் ஹைதராபாத்துக்குத்தான் வருகிறீர்களா?" என்று கேட்டேன்.

"ஆமாம். நீங்களும்.." என்றாள் அவள். அவளுடைய அழகுக்குப் போட்டி போட்டது அந்த மதுரமான குரல்.

"ஆமாம்....நீங்கள் ஏன் 'க்யூ'வில் நிற்க வேண்டும்? உங்கள் டிக்கெட்டைக் கொடுங்கள். நான் 'ரிசர்வ்' செய்து கொண்டு வந்து தருகிறேன்" என்றேன்.

அவள் சற்றுத் தள்ளி நின்று கொண்டிருந்தாள். 'க்யூ' நகர்ந்தது.

"இந்தாருங்கள். உங்கள் ஸீட் நெம்பர் நாலு. என்னுடையது ஐந்து!" என்றேன்.

"பேச்சுத் துணையாயிற்று!" என்றாள் அவள் சிரித்துக் கொண்டே.

எனக்கு அதற்கு மேலே என்ன பேசுவதென்று தெரியவில்லை.

"சரி, நான் வரட்டுமா? நாளைக்கு ரயிலில் சந்திக்கலாம்!" என்று சொல்லிவிட்டு அவள் போய் விட்டாள்.

* * *

அதிசயமாக மறுநாள் 'கிராண்ட்ரங் எக்ஸ்பிரஸி'ல் ஹைதராபாத் பெட்டியில் கூட்டமே யில்லை.

எங்கள் இருவரைத் தவிர, மறுபக்கமுள்ள ஆசனங்களில் ஓரிருவர் அமர்ந்திருந்தனர்.

என்னை வழியனுப்ப வந்த என் தாயாருக்கு அவளைக் கண்டதும் என்னவோமாதிரி யாகி விட்டதை என்னால் நன்றாக உணர முடிந்தது. அதிலும், எனக்கு முன்னால் வந்து விட்ட அவள், "ஹலோ, நமஸ்தே! வாருங்கள். உங்களுக்காக மேல்தளத்தில் ஜமக்காளம் விரித்து வைத்துவிட்டேன். இப்படி நேரம் கழித்து வரலாமா? இன்றைக்குக் கூட்டமில்லையோ, சௌகரியப் பட்டதோ!" என்றாள்.

"வந்தனம்!" என்றேன் நான்.

என் தாயாருக்கு எப்படி இருக்கும் என்று எனக்குத் தெரியாதா என்ன?

பெண்கள் விசித்திரமான புதிர்கள் என்பதற்கு என் தாயார் அப்போது தலையாய உதாரணமாகி விட்டாள். 'ஓர் இளம் பெண்

னுக்குப் பிரயாணத் துணையாகப் போகிறேன் என்று அவன்மேல் பச்சாதாபப்படுவதற்குப் பதிலாக, அந்தப் பெண்ணிடமிருந்து தப்புவதற்கு எனக்கே ஒரு துணை வேண்டுமென்று எண்ணிவிட்டாள் என் தாயார்!

நான் கூஜாவில் தண்ணீர் எடுத்து வருவதற்காகச் சென்றேன்.

அந்தச் சிறுநேர இடைவெளியில் அந்தப் பெண்ணும் என் தாயாரும் என்ன பேசிக் கொண்டார்களோ, எனக்குத் தெரியாது. நான் வந்ததும் என் தாயார் என்னை ஜன்னலருகில் தனியாகக் கூப்பிட்டு, "சுந்தரம்! அந்தப் பெண்ணிடம் உனக்குக் கல்யாணமாகி விட்டது என்று சொல்லியிருக்கிறேன். ஜாக்கிரதை! இவர்களிடமெல்லாம் மிகவும் பத்திரமாக நடந்து கொள்ளவேண்டும். உடம்பில் அதிகமாக நகை நட்டைக் காணும்; கழுத்தில் தாலிச்சரட்டைக் காணோம்; துணைக்கென்று இவளுக்கு யாரையும் காணோம். இவர்களையெல்லாம் நம்பலாமா? அதனால் தான் துணிந்து அப்படி ஒரு பொய்யைச் சொன்னேன். மறுபடியும் சொல்கிறேன், ஜாக்கிரதை. ஏதாவது தத்துப் பித்தென்று நடந்து கொள்ளாதே, ஆமாம்" என்று சொன்னதைக் கேட்டுத் திடுக்கிட்டு விட்டேன்.



உடல் நிறைய நகைகளைப் போட்டுக் கொண்டு, ஊர் நிறைக்கப் பந்தலைப் போட்டுத் தன் ஒரே மைந்தனுடைய கல்யாணத்தை விமரிசையாக நடத்தி வைக்கவேண்டும் என்று தாயாருக்கு ஆசையிருப்பது இயல்புதான்.

அதற்காக இவ்வளவு பெரிய பொய்யா? இனி என்னுடைய பேச்சு அந்த இளம் பெண்ணுடன் எப்படி இருக்கவேண்டும்? கல்யாணமான வாலிபன் ஒருவனுடன் கல்யாணம் ஆகாத ஒரு யுவதி பேசுகிறாள்; கல்யாணமான ஒரு யுவன் கல்யாணமாகாத ஓர் இளம் பெண்ணுடன் பேசுகிறான். இரண்டு பேருக்கும் எப்படிப்பட்ட அடக்கமும் வேலியும் இருக்கும் தத்தம் பேச்சுகளில்....? ஏதோ இயல்பாக நடந்து முடியும் ஒரு பிரயாண இன்பத்தை என் தாயார் எப்படிக் கெடுத்து விட்டாள் என்று தோன்றியது எனக்கு.

ரயில் புறப்பட்டது.

அவளுடன் என்ன பேசுவது, எப்படிப் பேசுவது என்று எனக்குத் தெரியவில்லை.

"உங்கள் தாயார் என்னைக் கண்டதும் பயந்து விட்டார்கள் போலிருக்கிறது...." என்று அவள் ஆரம்பிக்கவே, எனக்குச் 'சுரீ'ரென்று தைத்தது.

"ஏன்?" என்றேன்.

"அவள் 'கல கல' வென்று சிரித்துக் கொண்டே, "உங்களுக்குத் தெரிந்திருப்பதற்கு நான் விளக்கம் சொல்ல வேண்டுமா..? நல்ல வேளை! நீங்கள் கல்யாணமானவராக இருந்தீர்களோ, பிழைத்தீர்களோ..! இல்லாவிட்டால் உங்களை இன்றைக்குப் பிரயாணம் செய்யவே விட்டிருக்க மாட்டார்கள் உங்கள் தாயார்..!" என்றாள். இவ்வாறு சொல்லி விட்டு மேலும் 'கல கல' வென்று சிரித்தாள்.

இந்தச் சிரிப்பை வாழ்க்கை முழுவதும் கேட்டுக் கொண்டிருக்கலாமே என்று எனக்குத் தோன்றியது.

கையில் வர்ணமயமான ஒரு பத்திரிகையைப் பிரித்து வைத்துக் கொண்டே அவள், "உங்களுக்கு எந்த ஊரில் கல்யாணம்?" என்றாள்.

"தஞ்சாவூரில்.." என்றேன் தயங்காமல்.

"தஞ்சாவூரா? அப்படியென்றால் எனக்குத் தெரியாமலிருக்காதே..? தஞ்சாவூரில் யார்? எந்தத் தெரு?"

"தஞ்சாவூர் என்றால்—தஞ்சாவூர் இல்லை. பக்கத்தில் ஒரு கிராமத்தில்.."

கொஞ்ச நேரம் எங்களிடையில் மௌனம் நிலவியது. நான் அவளைப்பற்றி ஒன்றும் கேட்கவில்லையே என்று நினைத்துக் கொள்ளப் போகிறாளே என்று கருதி, "நீங்கள்..நீங்கள்.." என்று மெதுவாக இழுத்தேன்.

"என் தாயார் இங்கே சென்னையில் திருவல்லிக்கேணியில் இருக்கிறாள். 'இருக்கிறாள்' என்றால், ஒரு பெரிய பணக்காரர் வீட்டில் அறுசுவை உண்டி தயாரித்துத் தன் வயிற்றைக் கழுவிக் கொள்ளுகிறாள். இதைச் சொல்ல வெட்கப்படுகிறேன் என்று நினைக்காதீர்கள். இன்றைக்கு, உங்கள் தாயாரைப் போல, அவளும் ஸ்டேஷனுக்கு வருவதாகத் தானிருந்தாள். ஆனால், அவர்கள் வீட்டில் விருந்தாளிகள் வந்துவிட்டார்கள்; ஸ்பெஷல் சமையல். அதனால் அம்மாவால் என்னை அனுப்ப வரமுடியவில்லை."

"நீங்கள்...."

"நான் ஹைதராபாத்தில், ஸ்தல சர்க்கார் இலாகா ஒன்றில் வேலை பார்த்து வருகிறேன். லீவில் அம்மாவைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன்.—டிபன் சாப்பிடுகிறீர்களா?" என்று சொல்லி, டிபன் பாத்திரத்தைத் திறந்தாள்.

"நானும் கொண்டு வந்திருக்கிறேன்" என்று சொல்லிப் பாத்திரத்தைத் திறந்தேன்.

இரண்டு பேருக்குமாகச் சேர்த்து அவள் பரிமாறினாள். சந்தனக் கலரில் பளபளத்த அவளுடைய கரங்களைப் பார்த்துக் கொண்டே சாப்பிட்டேன். அந்த அழகு சம்பந்தமாக மனத்தில் எழுந்த இன்ப சங்கீதத்துக்கு, ரயிலின் 'டக டக' சத்தம் நேர்த்தியான சுருதி போட்டுக் கொண்டிருந்தது.

"நீங்கள் ஹைதராபாத்தில்...." என்று மீண்டும் ஆரம்பித்தாள் அவள்.

# ஸிரோலின்

## உங்கள் இருமலின் மூலகாரணத்தை நிறுத்துகிறது

**...நீங்கள் இருமுவதை நிறுத்த மட்டுமல்ல அது செய்வது**

ஸிரோலின் உங்கள் இருமலுக்குக் காரணமான அபாயகர கிருமிகளை ஒழிக்கிறது




# பாங்க் ஆப் மதுரை லிமிடெட்

ஸ்தாபிதம் : 1943

தலைமை ஆபீஸ் : மதுரை

கிளைகள் :

புதுக்கோட்டை, சேலம், கோயமுத்தூர்

செலுத்தப்பட்ட மூலதனமும் இதர நிதிகளும் ரூ. 14,98,700

மொத்த டிபாசிட்டுகள் (31-12-55ல்) ரூ. 2,55,91,000

மொத்த அலுவல் நிதி (31-12-55ல்) ரூ. 2,76,78,000

டைரக்டர்களின் போர்டு :

ஸ்ரீ கருமுத்து தியாகராசன், சேர்மன்
ஸ்ரீ வ. ராம. வள்ளியப்ப செட்டியார்
ஸ்ரீ நா. அ. அண்ணாமலை செட்டியார்
ஸ்ரீ உ. ராம. மெ. சுப. சேவு. அ. அண்ணாமலை செட்டியார்

சகலவித பாங்க் அலுவல்களும் கவனிக்கப்படும்

பி. எஸ். விஸ்வநாதன்
காரியதரிசி

## உலக மார்க் அசல் ஷண்முகம் பட்டணம் பொடி




MA

**ORIGINAL SHUNMUGAM SNUFF (ESTD-1839) CO.**
**POST BOX 140 MADRAS-1**

# உங்கள் கேசத்தை அதிக கருமையுடனும் பகட்டுடனும் வைக்க குளிர்ச்சியான வெண்ணிற ப்ரில்க்ரீம் உபயோகியுங்கள்



வெற்றிபெற்ற மற்றவர்களைப்போல் வினு மான்காடும் ப்ரில்க்ரீம் உபயோகிக்கிருர்

BRYLCREEM
A PERFECT HAIRDRESSING

* ப்ரில்க்ரீமின் சுத்தமான க்ரீமாக்கப்பட்ட எண்ணெய்கள் உங்கள் கேசத்தின் இயற்கை கருமை நிறத்தை சோபிக்கச் செய்கின்றன. சுத்தமான வெண்ணிற ப்ரில்க்ரீமை உங்கள் தலையில் தினந்தோறும் அழுத்தித் தேயுங்கள். பொடுகுகள் ஏற்படுவதை இது தடுத்து உங்கள் கேசத்தை சுத்தமாயும் ஆரோக்யத்துடனும் வைக்கிறது.

* சிறிதளவு ப்ரில்க்ரீம் நீடித்த உபயோகத்திற்கு வருகிறது! இன்றே ஒரு ப்ரில்க்ரீம் ஜாடியை வாங்கி எவ்வளவு காலம் அது நீடித்த உபயோகத்திற்கு வருகிறதென்று பாருங்கள்.

வாழ்க்கையில் வெற்றிபெற்றவர்கள்

# ப்ரில்க்ரீம் BRYLCREEM

உபயோகிக்கிருர்கள்

BRL. 2968 (a) Tam

"நான் அங்கே ஒரு சர்க்கரைத் தொழிற் சாலையில் இஞ்சினீயராக இருக்கிறேன்."

"ஓஹோ! அப்படியா!...நீங்கள் கல்யாண மானவர். ஆகையால் உங்களிடம் ஒரு விஷயத்தைச் சொல்லலாம் என்று எண்ணுகிறேன்!" என்றாள் அவள்.

ஆவலுடன், "என்ன?" என்று கேட்டேன்.

"இந்த ஆண்கள் கௌரவத்துக்காக ஒன்றைச் சொல்லி விட்டு, பிறகு இண்டாடுவதை என் வாழ்க்கையில் நிதர்சனமாகப் பார்த்திருக்கிறேன்" என்றாள்.

நான் கல்யாணமானவன் இல்லை என்று இவளுக்குத் தெரிந்து விட்டதா என்று ஒரு கணம் தவித்தேன்.

அதற்குள்ளாக அவள் எழுந்து கீழேயிருந்த தன் டிரங்குப் பெட்டியைத் திறந்தாள். அதில் இருந்த பையிலிருந்து கடிதத்தை எடுத்தாள்.

"இந்தக் கடிதத்தை உங்களிடம் கொடுக்கப் போகிறேன். அதற்கு முன்பு நான் சொல்லும் சில விவரங்களைக் கேளுங்கள். இந்தக் கடிதத்தை எனக்கு எழுதி யிருக்கும் வாலிபர், இந்த ஒரே ஒரு கடிதத்தைத் தான் எழுதினார். அவர் நல்ல அழகர். இப்போது உங்களிடம் பேசிக் கொண்டிருப்பதைவிட, அவரிடம் நான் கலகலப்பாகப் பேசிக் கொண்டிருந்தேன். ஆனால் அவரை நான் கதைகளில் வரும் பாஷையில் சொல்லுவது போல், **காதலிக்கவில்லை.** இது உங்களுக்கு ஆச்சரியமா யிருக்கலாம். கடிதத்தைப் படித்தால் புரியும்!" என்றாள்.

கடிதத்தைக் கையில் வாங்கிக் கொண்ட போதே எனக்கு மனத்தில் ஒரு கசப்புத் தோன்றியது. ஏற்கனவே ஒரு ஆண் மகன் இவளுக்குக் கடிதம் எழுதி யிருக்கிறானா?

கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தேன்:

"அன்புள்ள அமுதவல்லிக்கு,

உனக்கு நான் கடிதம் எழுதுவது ஆச்சர்யத்தைத் தரலாம்.

ஆனால் என் மன நிலையை உனக்கு விண்டு சொல்லிவிட வேண்டும். ஆரம்பத்திலிருந்தே சொல்லுகிறேன்.

நான் தஞ்சாவூருக்கு ஓவர்ஸியராக மாற்றி வந்ததும், நீயும் உன் அம்மாவும் குடியிருந்த அந்தப் பெரிய வீட்டில் ஓர் அறையை வாடகைக்கு எடுத்துக் கொண்டதும் என் நினைவில் என்றைக்கும் அழியாத பொற் சித்திரங்களாக இருக்கும்.

என்னைக் கண்டதும் உனக்கு எப்படித் தோன்றியதோ, எனக்குத் தெரியாது. உன்னைக் கண்டதும் என் மதி மயங்கி விட்டது. நான் வந்தபோது, உன் தாயார் என்னைத் தன் பிள்ளையைப்போல் பரிவுடன் விசாரித்து, "இன்றைக்கு நீங்கள் நம் வீட்டில் சாப்பிடலாம். நாளை முதல் ஹோட்டலில் வைத்துக் கொள்ளலாம். வந்தவுடன் ஹோட்டலுக்குப் பறக்க வேண்டாம்" என்றாள்.

நீ பின்னால் நின்று புன்னகை பூத்துக் கொண்டிருந்தாய். அது உன் இயல்பான குணம் என்று எனக்குத் தெரியாமல் போய் விட்டது. இவ்வளவு பெரிய வீட்டில் ஏதோ ஒரு மூலையில் குடியிருக்கும் இந்த ஏழைகள் ஏதாவது நாடகம் ஆடுகிறார்களா என்றும் நினைத்து விட்டேன்.

இதற்கேற்றாற் போல் ஒன்றுச் சகடையை இழுத்துப் பழக்கப்பட்டிராத நான் தவித்த போது நீ ஓடோடியும் வந்து நீர் இறைத்து வைத்தாய். வந்து இருபது நிமிஷம்கூட ஆக வில்லை; நீ இப்படி நடப்பதென்றால் எனக்கு என்னவோ மாதிரியிருந்தது.

அந்தச் சமயத்தில் எனக்கு வாழ்க்கையின் அந்த முக்கியமான விஷயம் தெளிவாக வில்லை. அதிகம் நாணமுள்ள பெண்கள் மற்றவருக்கு எத்தனை தவிப்பைத் தருவார்களோ, அதே போலக் கலகலப்பாக இருக்கும் பெண்களும் மற்றவருக்குத் தவிப்பைத் தருவார்கள் என்பது தான் அது.

அன்று சாப்பிட்ட போது—

"உங்களுக்குக் கல்யாணமாகி விட்டதா?" என்று உன் அம்மா என்னை உடனடியாகக் கேட்டது அப்படியே கலகலக்க வைத்து விட்டது என் உள்ளத்தை!

என்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்று பொல்லாத மனம் ஏனோ எண்ணியது.

'சட்'டென்று, "எனக்குக் கல்யாணமாகி விட்டது" என்றேன்.

அமுதவல்லி! அங்கேதான் தவறி விட்டேன் என்று தெரிந்தது. உன் முகம் ஒரு மாறுதலும் காட்டவில்லை. சூரிய காந்திப் பூ புன்னகை காட்டியது போலவே நீயும் புன்னகை பூத்திருந்தாய்.

நீ என்னிடம் பழகிய விதத்தில் அபரிமிதமான உரிமை இருந்தது. என்னுடன் பேசிய ஒவ்வொரு சொல்லிலும் 'அண்ணா' என்று சேர்த்துத் தீர்த்து விட்டாய்.

ஆனால், அமுதா! அந்த ஒரு சம்பவத்தை என்னால் மறக்கவே முடியாது.

அன்று, வீட்டுப் புழக்கடையில், மல்லிகைப் பந்தலுக்கடியில், நிலவில் ஈஸிசேரைப் போட்டுக் கொண்டு நான் உட்கார்ந்திருந்தேன்.

நீ எனக்கு அருகில் கீழே தரையில் வந்து உட்கார்ந்து கொண்டாய். "ஒரு பாட்டுப் பாடுங்களேன், அண்ணா!" என்றாய்.

"பாரதியாரின் பாடலைத்தானே பாட வேண்டும். இதோ" என்று ஆரம்பித்தேன்.

"**கண்ணன் மன நிலையைத் தங்கமே தங்கம்**
**கண்டுவர வேணுமடி தங்கமே தங்கம்...**"

பாட்டு முடியும்வரை, அமுதவல்லி, நீ பாரதியாய், விண்ணுமறியாய். ஆனால், என் மன நிலையையும் நீ அறியவில்லை.

"அண்ணா! மன்னி அதிர்ஷ்டசாலி. இந்தப் பாட்டைக் கேட்டுக் கொண்டு பொழுது போவது தெரியாமல் உட்கார்ந்திருக்கலாமே! இந்தப் பாட்டைக் கேட்கவிடாமல் மன்னியை ஏமாளியாக்குகிறீர்கள் நீங்கள், அண்ணா!"

என்னால் தாளவில்லை.

"அமுதா!.." என்று கட்டுமீறிய உணர்ச்சி வசத்தில் உன் கைகளைப்பற்றினேன்.

நீ 'சட்'டென்று என் கைகளை உதறி விட்டாய். எழுந்தும் விட்டாய். ஆனால் என் உள்ளம் உன்னையே நாடியது.

அப்புறம், அமுதா! ஹைதராபாத் சர்க்கார் வெளியிட்ட விளம்பரம் வந்தது.

அதை என்னிடம் எடுத்துக் கொண்டு ஓடி வந்து, "ஒரு நல்ல 'அப்ளிகேஷனை' எழுதித் தாருங்கள், அண்ணா! உங்கள் கை முகூர்த்தம் எனக்கு வேலை கிடைக்கிறதா, பார்ப்போம்!" என்று கூறினாய்.

எழுதிக் கொடுத்தேன். உனக்கு வேலையும் கிடைத்து விட்டது. நீயும் ஹைதராபாத்துக்குப் புறப்பட்டு விட்டாய்.

நான் வந்த முதல் நாள் சொன்ன ஒரு பொய்க்காக—ஒரே ஒரு குற்றத்துக்காக—என்னை மன்னித்து விடு, அமுதா. உன்னை நான் என் மனமார நேசிக்கிறேன்.

ரகுநாத்

கடிதத்தைப் படித்து முடித்த பிறகு நான் ஒரு பெருமூச்சு விட்டேன். அவளை—அமுதவல்லியை—நிமிர்ந்து பார்த்தேன். இவள் என்ன அதிசயப் பெண்ணோ! அந்த முகத்தில் மாறுதல் இருந்தால்தானே? ஒரே ரீதியான எழில் புன்னகைதான்!

"படித்தீர்களா? என்ன தோன்றுகிறது?"

"தோன்றுவது என்ன...?" என்று இழுத்தேன் நான். வேறென்ன சொல்ல முடியும்? என் வரையில் என்னுடைய தாயாரின் வார்த்தைகள் எனக்கு எதிரில் நின்று விட்டன.

அமுதவல்லி ஒரு கேலிச் சிரிப்புடன், "ஆனந்தமாக வாழலாம் என்று சொல்லுகிறார். என் மனசில் எப்படிப்பட்ட வேதனை உண்டு பண்ணி விட்டார்! இவருக்கு உள் மனசில் அளித்திருந்த ஒரு கௌரவமான இடத்தைப் பாழ் பண்ணிக் கொண்டதல்லாமல், என்னை அன்பு கொள்ளச் சொல்லுகிறார்! அவரை 'அண்ணா', 'அண்ணா' என்று அழைத்த சந்தர்ப்பங்களை நினைத்துப் பார்க்க இப்போது கூட நான் வெட்கப்படுகிறேன்... ஆமாம், உங்களையே கேட்கிறேனே. இந்த ஆண்கள் இப்படி ஏன் நடந்து கொள்ளுகிறார்கள்?" என்று கேட்டாள்.

நல்ல வேளை, ரயில் வண்டி, பெஜவாடா ஸ்டேஷனுக்குள் நுழைந்ததோ, அந்தக் கேள்விக்கு நான் பதிலளிக்கச் சந்தர்ப்பம் ஏற்படாமற் போய் விட்டதோ? நான் தப்பினேன்.

"சாப்பிட வேண்டுமே..." என்று சொல்லி எழுந்து விட்டேன் நான்.

வண்டி காஸிப்பேட்டை தாண்டி யிருக்கும். நேரம் நடு இரவு தாண்டி யிருந்தது. மேல் 'பெர்த்தில்' படுத்துக் கொண்டிருந்த நான் கீழே பெஞ்சியில் அமுதவல்லி தூங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். 'அடாடா! எப்படிப்பட்ட சௌந்தரியம்! என் தாயார் காரியத்தைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கி விட்டாளே' என்று தோன்றியது.

ஆனால் பெண்களே பெரிய புதிர்கள். அம்மா அப்படிச் சொல்லி யிருக்கா விட்டால் அமுதவல்லி என்னிடம் அப்படிக் கலகலப்பாகப் பேசியிருப்பாளா என்றும் எனக்குச் சந்தேகம் தோன்றியது.

செகந்திராபாத் வந்தது.

"நமஸ்தே. நான் வருகிறேன். பொழுது போவது தெரியாமல் போய் விட்டது. வந்தனம்" என்று சொல்லி விட்டு அமுதவல்லி போய் விட்டாள். அவளுடன் என் ஹிருதயத்தையும் தூக்கிக் கொண்டு போய் விட்டாற் போலிருந்தது.

பல் தேய்க்கலாம் என்ற எண்ணத்துடன் என் கைப் பையின் மேலிருந்த டூத் பேஸ்ட் அட்டைப் பெட்டியைத் திறந்தேன். அதற்குள்ளிருந்து டூத் பேஸ்டுடன் ஒரு துண்டுக் கடிதமும் வெளியே வந்து விழுந்தது.

"நண்பருக்கு,

இந்தத் துண்டுக் கடிதத்துக்குப் பின்னால் உங்கள் ஜாதக நகலும், அதற்கடியில் 'இப்பொழுது கல்யாணமே வேண்டாம்' என்று நீங்கள் உங்கள் தாயாருக்கு எழுதி யிருக்கும் குறிப்பும், அதில் பத்து நாட்களுக்கு முந்தைய தேதியும் இருக்கின்றன. சென்டிரல் ஸ்டேஷனில் நடந்தது ஆகிய எல்லா வற்றையும் நினைத்துப் பார்க்கும்போது இப்போது எனக்கும் புரிகிறது.

கடிதம் நீங்கள் மேல் 'பெர்த்தில்' படுத்துத் தூங்கியபோது கீழே விழுந்தது. அதை யதேச்சையாகப் படித்து விட்டேன். அதற்காக மன்னிக்கவும்.

ஆனால் ஒன்று. ஆண்கள்தான் அசடர்களாக நடந்து கொள்ளுகிறார்கள் என்றால், பெண்கள் அதற்கு மேல் அசடர்களாக இருக்கிறார்கள் என்று அறிந்து கொண்டேன்.

தாங்கள் அளித்த வழித் துணைக்கு நன்றி செலுத்தும் அதே சமயத்தில், உங்களை 'அண்ணா' என்று அழைத்து உங்களுடைய மன வேதனைக்குள்ளாகாமல் இருந்ததற்காக ஆண்டவனுக்கும் நன்றி செலுத்துகிறேன்.

அமுதவல்லி."

ஹைதராபாத்தை அடைந்ததும், என் அறைக்குப் போய்க் கட்டிலில் விழுந்தேன். வழித் துணைக்கும் வாழ்க்கைத் துணைக்கும் வித்தியாசம் இல்லையா என்ன?

மனம் ஒரு மாயப் பொருளோ இல்லையோ, இந்த விநோதமான அநுபவத்துக்கப்புறம், அமுதவல்லியை மணந்து எல்லையற்ற இன்பத்தை அடைந்து விட்ட பொழுதிலும், என் மனம் வெகு நாட்கள் வேதனைப்பட்டுக் கொண்டுதான் இருந்தது.

## சுதந்திரச் செல்வம்

"பாரதத்தாய் செய்த பாக்கியத்தினால், நமது முன்னோர்கள் செய்த தவத்தினால், லோகமான்ய திலகர், தாதாபாய் நௌரோஜி, லாலாலஜபதிராய், தேசபந்து தாஸ், வ. உ. சிதம்பரம் பிள்ளை, மோதிலால் நேரு, சத்தியமூர்த்தி, அஜ்மல்கான், அன்ஸாரி முதலிய தேச பக்தத் தலைவர்கள் தோன்றினார்கள். அவர்களுடைய மகா தியாகங்களினாலும் காந்தி மகாத்மாவின் ஆத்ம சக்தியினாலுமே இந்தியா பரிபூரண சுதந்திரம் பெற்றது.

அப்படி நாம் பெற்ற சுதந்திரச் செல்வத்தைக் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாக்க வேண்டும். அலட்சியமாயிருப்பதும் அசட்டையாகப் பேசுவதும் தற்கொலைக்கு ஒப்பான காரியங்கள்."

— பேராசிரியர் கல்கி





# புத்தி வந்தது

பரத்வாஜ வம்சத்தில் பிறந்த ஒருவர் வாலிபப் பருவத்திலேயே தவம் செய்து கொண்டிருந்தார். அவருக்கு ஒரு ஆசை. முன்னாளில் ரிஷிகள் எழுதிய உபநிஷத்துகளைப் போல் தாமும் ஒரு நல்ல உபநிஷத்து புதிதாக எழுத வேண்டும் என்று. இப்படி ஆசைப்பட்டு, இதற்கு என்ன செய்வது என்று தோன்றாமல் சதுர் முகப் பிரம்மனைத் தியானித்துத் தவம் செய்தார்.

"குழந்தாய்! என்ன வேண்டும்?" என்றான் பிரம்மன்.

"நான் ஒரு நல்ல புதிய உபநிஷத்து எழுத வேண்டும். அதற்கு என்ன செய்ய வேண்டும், சொல்லுவீராக" என்றார் பாரத்துவாஜ வாலிப ரிஷி.

"பழைய உபநிஷத்துக்களை நன்றாய்ப் படிப்பாயாக" என்றான் பிரம்மன்.

"பழைய உபநிஷத்துக்களை நான் படித்தேனானால் புதிய விஷயம் ஒன்றும் தோன்றாது. பழைய உபநிஷத்துகளில் சொன்னதே என் மனத்தைக் கவர்ந்து விடும். வேறு புது கருத்துக்களுக்கு இடமே இராது. எழுத உட்கார்ந்தால் பழைய ரிஷிகள் சொல்லி யிருப்பதையே தான் நானும் எழுதவேன். புதியதொன்றும் இருக்காது. என்னுடைய எண்ணம் நிறைவேறாமல் போகும்" என்றார் ரிஷி.

"நீ சொல்வது உண்மைதான். உபநிஷத்துக்களைப் படிக்க வேண்டாம். கொஞ்சகாலம் உலக வாழ்க்கை வாழ்ந்து முடிப்பாய். அப்படிச் செய்தால் புது கருத்துக்கள் தோன்றும்" என்றான் பிரம்மன்.

"நான் ஒரு ரிஷி. உலக வாழ்க்கையில் நான் எப்படி இறங்கலாம்? உலக வாழ்க்கையில் புகுந்தால், அதுவே என்னுடைய உள்ளத்தை யெல்லாம் பிடித்துக் கொள்ளும். ஞானம் நிறைந்த புது உபநிஷத்து எழுதத் தோன்றாது. நான் கோருவது அதுவல்லவா?" என்றார் ரிஷி.

பிரம்மன் நான்கு முகங்களும் மலர்ந்து புன்னகை புரிந்தான்.

"அப்பனே! உன்னால் உபநிஷத்து எழுத முடியாது. வீண் ஆசையை வைத்துக் கொண்டு அலையாதே!" என்றான்.

ரிஷிக்குச் சமாதானம் ஏற்படவில்லை. பிரம்மன் மறைந்து விட்டான்.

ஒரு வேடன் வந்து, "ஐயா! மிகவும் தாகமாக இருக்கிறது. களைத்துப் போய் இருக்கிறேன். கொஞ்சம் குடிக்கத் தண்ணீர் கொடுப்பீரா?" என்று ரிஷியைக் கேட்டான்.

உள்ளே சென்று ரிஷி தம் கமண்டலத்தைப் பார்த்தார். அதில் தண்ணீர் இல்லை. "கொஞ்சம் பொறு. குளத்துக்குச் சென்று தண்ணீர் கொண்டு வருகிறேன்" என்றார்.

"குளத்துத் தண்ணீர் எனக்கு வேண்டாம். அது என் தாகத்தைத் தணிக்காது" என்றான் வேடன்.

"அப்படியானால் கொஞ்சம் தூரத்தில் ஆறு இருக்கிறது. அங்கே போய் ஓடும் ஆற்றுத் தண்ணீரை மொண்டு வருவேன். நீ இங்கேயே இரு" என்றார் ரிஷி.

"முடியாது. நான் காத்திருக்க முடியாது. நீர் ஆற்றுக்குச் சென்றால் பின் திரும்பி வரமாட்டீர். அங்கே புலியும் ஓநாயும் மக்களைக் கொல்லக் காத்திருக்கின்றன" என்றான் வேடன்.

ரிஷிக்கு வேடனுடைய பேச்சுக்கள் ஒன்றும் விளங்கவில்லை. யோசித்துக் கொண்டிருந்தார். வேடன் மறைந்து போனான்.

"ஓகோ! இவன் வேடன் அல்ல. நான்முகக் கடவுளே எனக்கு உபதேசிக்க இந்த நாடகம் நடத்தினான் போலிருக்கிறது. நான் பழைய உபநிஷத்துக்களைப் படிக்க மாட்டேன் என்று சொன்னதுபோல் இந்த வேடன் "குளத்து நீர் வேண






டாம்" என்றான். உலக வாழ்க்கையும் வேண்டாம் என்றேன். ஓடும் ஆறு போல் அல்லவா உலக வாழ்க்கை. நிலையில்லாத பொருள்கள் உண்டாகி மறைந்து, மறுபடியும் உண்டாகி, ஆற்று நீரைப் போல் வாழ்க்கை ஓடுகிறது. அதில் மொண்டு ஞானத் தண்ணீர் பெறுவதும் இயலாது என்றேன் அல்லவா நான்? என் கமண்டலத்தில் தண்ணீர் இல்லை. தண்ணீர் வேண்டுமானால் ஆற்றுக்காவது குளத்துக்காவது போய்த்தான் பெற வேண்டும், புத்தி வந்தது!" என்று தனக்குள் சொல்லிக் கொண்டார் ரிஷி.

"சந்தோஷம்" என்றான் பிரம்மன், ரிஷிக்கு மறுபடி தரிசனம் தந்து.

# உங்கள் அழகை அதிகரிக்கிறது பாதுகாக்கவும் செய்கிறது!

அற்புத நறுமணமூட்டப்பட்ட சார்மிஸ் ஸ்னோ உங்கள் சருமத்தை அழகுறச் செய்கிறது, பாதுகாக்கிறது. எல்லா பருவ காலங்களிலும் சருமத்தை மிருதுவாகவும், வெல்வெட் போல வழவழப்பாகவும் வைக்கிறது. பவுடருக்கு ஆதாரமானது. எண்ணைப் பசையில்லாதது. சார்மிஸ் ஸ்னோ சொற சொறப்பும், வரிகளும், கோடுகளும், புண்களும் ஏற்படாமல் சிறந்த முறையில் தடுக்கிறது. பூச்சிக்கடிகள், வெடிப்புகளினின்றும் பாதுகாக்கிறது.






ஒரு கால்கேட் உயர்தர சரக்கு

## சார்மிஸ் ஸ்னோ

CSG/3

சார்மிஸ் பலகாரிய க்ரீமையும் டால்கம் பவுடரையும் பரீட்சித்திருக்கிறீர்களா?







# திலகர் காட்டிய வழி

குழந்தைகளே! பாலகங்காதர திலகர் நம் நாட்டின் சுதந்திரத்துக்காக அரும்பாடுபட்டார். ஏழை எளியவர்களுக்கும் பேருதவி புரிந்து வந்தார். அவர்கள் வாழ்க்கையை உயர்த்துவதற்கான செயல்களில் ஈடுபட்டார்.

வேலையில்லாமல் அல்லலுற்ற ஒருவருக்கு உழைப்பின் உயர்வைத் திலகர் உணர்த்தினார். திலகரின் உதவியினால் அவர் புனாவில் ஒரு பெரிய வாடகை வண்டி ஓட்டும் முதலாளியாக மாறி விட்டார். அவரே தம்முடைய சரித்திரத்தைக் கூறுவதைக் கேளுங்கள் :




நான் 'பெல்காம்' பக்கத்து மனிதன். என்னுடைய பால்ய வயதில் நான் வேலையில்லாமல் மிகவும் சிரமப்பட்டேன். 'ஸர்தார் திலக்' அவர்களை அணுகினால், வழி பிறக்கும் என்று சொன்னார்கள். நான் புனாவுக்குக் கால்நடையாகச் சென்று திலகரைத் தரிசித்து என் வேண்டுகோளை அவரிடம் தெரிவித்தேன்.

திலகர், ''உனக்கு மாட்டு வண்டி ஓட்டத் தெரியுமா?'' என்று என்னைக் கேட்டார். 'தெரியும்' என்று பதில் கூறினேன். உடனே அவர் ஒரு சீட்டு எழுதி, என்னிடம் கொடுத்தார். அதை ஒரு குறிப்பிட்ட மனிதரிடம் கொண்டு போய்க் கொடுத்தால் அந்த மனிதர் எனக்கு ஒரு மாட்டு வண்டி கொடுப்பார் என்றும், அதைக் கூலிக்கு ஓட்டி ஜீவிக்கும்படியும், தினம் என் சம்பாத்தியத்தில் எட்டணா கொண்டு வந்து அவரிடத்திலிருந்த உண்டியில் போடும்படியும் சொன்னார்.

திலகர் பெருமான் கூறியபடியே தவறாமல் செய்து வந்தேன். அறுபது நாட்கள் சென்றன. மறுநாள் வழக்கம்போல் எட்டணா எடுத்துச் சென்று உண்டியில் போடப் போனேன். என்ன அதிசயம்! அங்கே உண்டியலைக் காணவில்லை. திலகர் நின்று கொண்டிருந்தார். என்னைக் கண்டதும் ''மாடும் வண்டியும் உன்னுடையவை. அதன் விலையை நீ கொடுத்தாகி விட்டது. இனிமேல் நீ பணம் கொடுக்க வேண்டியது ஒன்றுமில்லை'' என்று சொன்னார்.




நான் வியப்புற்றேன். அது முதல் நானும் திலகரைப் போலவே மற்றவர்களுக்கு உதவி செய்ய நிச்சயித்தேன். நூற்றுக் கணக்கானவர்களுக்கு இதுவரையில் அவ்வாறு உதவியும் செய்திருக்கிறேன்.

குழந்தைகளே! நீங்களும் பெரியவர்களான பிறகு இதேமாதிரி மற்றவர்களுக்கு உதவி புரிய முனைந்தால் உங்களுக்குப் பெயரும் புகழும் வந்தடையும்.

—ரீவ் ஸ்ரீ சங்கரய்யர்



# தந்தப் புல்லாங்குழல்

(கர்ண பரம்பரைக் கதை)

ராமன் ஓர் அனாதைச் சிறுவன். அவன் தன்னுடைய அண்ணன் கிருஷ்ணனுடைய ஆதரவில் வளர்ந்து வந்தான். ராமனுடைய அண்ணி அவனைக் கடுமையாக வேலை வாங்கிக் கொடுமைப் படுத்தி வந்தாள்.

ராமன் தினந்தோறும் ஆடுமாடுகளைப் பசும்புல் மைதானத்துக்கு ஓட்டிச் சென்று மேய்த்து வருவான். வீட்டு வேலைகள் எல்லாவற்றையும் அவனே செய்தாக வேண்டும். அவனுக்கு வயிறு நிறைய ஆகாரம் கிடைக்காது. அதனால் அவன் இளைத்துத் துரும்பாகி விட்டான். ஆடு மாடுகளுடன் அவனால் ஓடி ஆடி அலைய முடியவில்லை.

ராமனுடைய ஆடு மாடுகள் தன் வயலில் மேய்ந்து அழிப்பதைக் கண்டு வெகுண்ட குடியானவன் ராமனைக் கம்பினால் ஆத்திரம் தீர நையப் புடைத்தான். ராமன் அலறித் துடித்தான்.

அவனுடைய தீனமான அழுகுரலைக் கேட்டு மனம் இரங்கி அவனருகில் ஒரு வனதேவதை வந்தாள். அவனைச் சமாதானப்படுத்தி அவனிடம் ஓர் அழகான தந்தப் புல்லாங்குழலைக் கொடுத்து, "நீ எதை எண்ணி இந்தப் புல்லாங்குழலை வாசிக்கிறாயோ, அந்தப் பொருள் உனக்கு உடனே கிடைக்கும்" என்று கூறி மறைந்தாள்.

அன்று முதல் தந்தப் புல்லாங்குழலின் உதவியால் அவனுக்குத் தினந்தோறும் தேவையான உடை, உணவு முதலியன கிடைத்து வந்தன. அவன் உடலும் ஆரோக்கியமடைந்து வந்தது. இந்த மாறுதலைக் கண்ட அவன் அண்ணி வியப்படைந்தாள். 'ஓஹோ! இவன் பிறர் தினமும் பாலைக் கறந்து குடித்து விடுகிறான் போலும்! அதனால்தான் இவன் உடல் தேறி விட்டது' என்று எண்ணி ஆத்திரமடைந்தாள். அந்தக் கோபத்தில் ஒருநாள் அவனை வீட்டை விட்டே அடித்துத் துரத்தி விட்டாள்.

ராமன் மனமுடைந்து வனதேவதை வாழும் காட்டுக்குச் சென்று புல்லாங்குழலை ஊதினான். வனதேவதை அவன் முன் தோன்றி ஆறுதல் கூறி, அவனை உமையபுரம் என்கிற பட்டணத்துக்கு அழைத்துச் சென்றாள்.

அங்கே காளி கோயில் ஒன்று இருந்தது. அவனை அங்கு அழைத்துச் சென்று காளியிடம் ஒப்படைத்து விட்டுத் தேவதை மறைந்து போய் விட்டாள். ராமன் காளி கோயிலிலேயே வசித்து வந்தான்.

நவராத்திரி உற்சவம் வந்தது. காளி கோயிலைச் சுற்றி எங்கு பார்த்தாலும் ஏராளமான மக்களும் குழந்தைகளும் குழுமியிருந்தனர்.

ராமன் தன் பொக்கிஷமான புல்லாங்குழலைக் கூட்டத்தில் நழுவ விட்டு விட்டான். அங்கும் இங்கும் ஓடி ஓடித் தேடினான். யாரை யெல்லாமோ கேட்டுப் பார்த்தான். ஆனால் அந்தத் தந்தப்



புல்லாங்குழல் அகப்படவில்லை. புல்லாங்குழல் உமயபுரம் அரசனுடைய காவலாள் ஒருவனிடம் கிடைத்தது. அவன் அந்த அதிசய தந்தப் புல்லாங் குழலை மஹாராணியிடம் கொண்டு போய்க் கொடுத்தான்.

ராணி அந்தப் புல்லாங்குழலைத் தன் அருமை மகளிடம் கொடுத்தாள். ராஜகுமாரி அந்தப் புல்லாங்குழலின் இணையற்ற வேலைப்பாடுகளில் மயங்கி அதை வாசித்துப் பார்த்தாள். அவள் வாசிக்கத் தொடங்கியதும் வனதேவதை அவள் முன் காட்சி அளித்தாள். திடீரென்று அவள் முன் குதித்த தேவதையைக் கண்டு ராஜகுமாரி பயந்து மூர்ச்சையாகி விட்டாள். அன்று முதல் அவளுக்குச் சித்தப் பிரமை உண்டாகி விட்டது. அரசனும் தன் புதல்வியின் நோயைத் தீர்க்க ஆயிரக்கணக்கான வைத்தியர்களை வரவழைத்தான். ஆனால் நோய் குணமாகவில்லை. காரணம் புரியாமல் அரசன் மனம் கலங்கித் தவித்தான்.

சென்ற வாரத்துக் கேள்விக்கு விடை:
கழுதை, யானை, ஒட்டகம், நாய்
இந்த நாலு மிருகங்களும் பொது வாக மனிதனுக்காக உழைக்கின்றன.

ஒரு நாள் அரசன் தற்செயலாக அவன் அருகில் தந்தப் புல்லாங்குழல் இருக்கக் கண்டான். அதை வாசித்துப் பார்த்தான். உடனே தேவதை அவன் முன் தோன்றினாள். "அரசனே! இந்தப் புல்லாங்குழலுக்குரிய ராமன் காளி கோயிலில் வசித்து வருகிறான். அவனிடம் இதைக் கொண்டு போய்க் கொடு. அவன் உன் மகளின் நோயைக் குணப்படுத்த முடியும். அவன் குணப்படுத்தியதும் உன் மகளை அவனுக்குப் பரிசாகத் திருமணம் செய்து வைக்க வேண்டும்" என்று கூறி மறைந்தாள்.

அரசன் அரண்மனைச் சேவகர்களை அனுப்பி ராமனை அழைத்து வரச் செய்தான். அரண்மனைக்கு வந்த ராமனிடம் அந்தப் புல்லாங்குழலைக் கொடுத்து வாசிக்கச் சொன்னான். ராமனும் அரசிளங் குமாரி முன் அமர்ந்து இசை அமுதம் வழங்கினான்.

வனதேவதையின் கருணையால் ராஜகுமாரி பரிபூரண குணமடைந்தாள். அரசன் ராஜகுமாரியிடம் நடந்த விவரங்களைக் கூறி, ராமனை மணந்து கொள்ளுமாறு வேண்டிக் கொண்டான். ராஜகுமாரியும் ராமனது அழகில் மயங்கி, அவனை மணப்பதற்குச் சம்மதித்தாள்.

உமயபுரம் அரசன் தனது செல்வப் புதல்வியின் திருமணத்தை வெகு விமரிசையாக நடத்தினான்.















# 169

மேலே உள்ள எண்களை எப்படி வேண்டுமானாலும் திருப்பிப் போட்டு பெரிய எண்ணிக்கை ஆக்க வேண்டும். நீங்கள் உடனே 961 என்று எழுதி விடுவீர்கள். அதுதான் இல்லை. பின் என்ன? (விடை அடுத்த இதழில்)






முள்ளம் பன்றி:- நான் தான் முள்ளம் பன்றி. இந்தப் போலிகளைக் கண்டு ஏமாறாதீர்கள்!

# நீரிழிவு

## குணமாகும்

சிறு நீரில் சர்க்கரை காண்பது நீரிழிவு (DIABETES) நோயின் முக்கிய அறிகுறி. உங்களுக்குப் பசியும் தாகமும் அதிகமாயிருந்தாலும், உடல் உருகிக் கொண்டு வந்தாலும் அடிக்கடி நீர் இறங்கினாலும் உங்களுக்கு நீரிழிவு நோய் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இக் கொடிய உடல் உருக்கி நோய், தான் பற்றினவர்களைக் கடைசி மூச்சு உள்ள வரையில் விடுவதில்லை; கொஞ்சம் கொஞ்சமாக அவர்களை மரண வாயிலுக்கு இழுத்துச் செல்லும். நீரிழிவு வியாதியைக் குணப்படுத்த இஞ்செக்ஷன்கள் போடப்படுகின்றன; ஆனால் அவற்றினால் வியாதி கொஞ்சமும் குணமாவதில்லை, இஞ்செக்ஷன்கள் நீரில் சர்க்கரையை குறைக்கின்றன — அதுவும் மருந்துச் சக்தி உள்ள வரையில்தான். ஆகவே, உபாதைகளைத் தடுக்க வாழ்நாள் முழுவதும் ஊசிகள் போட வேண்டியதுதான். இதனால் அதிகச் செலவு ஏற்படுவதோடு கஷ்டமும் உண்டாகிறது. நோய் குணப்படுத்தாது போனால் நீங்கள் புண்களினாலும், கண் நோய், பல் நோய், வயிற்றுக் கோளாறு முதலிய பலவித வேதனைகளால் சிரமப்பட நேருகிறது.

நீரிழிவு வியாதியை, **வீனஸ் சார்ம்** மாத்திரைகளை உபயோகித்து, சிக்கனமாகவும், சுலபமாகவும், நிச்சயமாகவும், பத்திரமாகவும் சிகிச்சை பெறுங்கள்.

பண்டைக்கால யுனானி வைத்திய முறைகளைக் கொண்டு, அரிய மூலிகைகளின் சேர்க்கையுடன் தயார் செய்யப்படும் **வீனஸ் சார்ம்** மாத்திரைகள், நோயை அடியோடு அகற்றுவதுடன், எத்தனையோ பேர்களை இன்செக்ஷன் அல்லது ஒருவிதமான பட்டினி இல்லாமல் குணமாக்கியிருக்கிறது. இதை உபயோகித்து பல ஆயிரக் கணக்கானவர்கள், இந்நோயின் மரணப் பிடியிலிருந்து தப்பியிருக்கிறார்கள். இம் மருந்தை உபயோகிக்கத் தொடங்கிய இரண்டு மூன்று நாட்களுக்கெல்லாம், நீரில் சர்க்கரை குறைகிறது; அத்துடன் அதிக நீர் இறங்குவதும் நிற்கிறது. சில நாட்கள் உபயோகித்தாலே நோய் தணிந்து திருப்தி ஏற்படுகிறது. வீட்டிலிருந்தபடி **வீனஸ் சார்ம்** சிகிச்சையைத் துவங்குங்கள். விசேஷ பத்தியம் எதுவும் இல்லை. நீங்களே அதன் குணத்தை அறிவீர்கள். இதுபற்றிய விரிவான இலவச ஆங்கிலப் பிரசுரத்தை வரவழைத்துப் பாருங்கள்.

**50 மாத்திரைகள் கொண்ட புட்டி ஒன்றின் விலை 6-12-0**

*(பாக்கிங் தபாற் செலவு இனாம்)*

**வீனஸ் ரிஸர்ச் லாபரேட்டரி (K. M)**
**தபால் பெட்டி நெ. 587. கல்கத்தா**

---

**Champion** REGD.



CHAMPION ADMIRAL

CHAMPION DELUX 105

CHAMPION 101

CHAMPION 102-103

CHAMPION 151

AEROMETIC VACUUME

EVERSHARP TYPE 121

*The Choice of all*

**GUJARAT INDUSTRIES**
**PRIVATE LIMITED**

LALJI MANSING BUILDING,
LOHAR CHAWL BOMBAY-2.

"விலை ரூ. 2-8-0 முதல் ரூ. 15 வரையுள்ள பல ரக பேனாக்களை காண்பிக்குமாறு உங்களது பேனா டீலர்களைக் கேளுங்கள்."

# பாக்யசாலிக் குழந்தை!
# அனுபவமுள்ள அப்பா!

குழந்தைக்கு ஓரே குஷி! அவன் தகப்பனார் எப்பொழுதும் ஜான்ஸன்ஸ் பேபி பவுடர் வாங்கி வருகிறார். என்ன குளுமை! என்ன மென்மை! அந்தக் குழந்தையின் சருமத்திற்கு எவ்வளவு இனிமையானது!

Johnson's

ஜான்ஸன்ஸ் பேபி பௌடர்




**இலவசம்** குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவச பிரதிக்கு எழுதுங்கள். பெற்றோர்களுக்கு வேண்டிய அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. கவனமாகப் படித்துப் புரிந்து கொள்ளும்படியான இங்கிலீஷ் பாஷையில் எழுதப்பட்டுள்ளது.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்
பி.ஓ. பாக்ஸ் 1976, டிபார்ட்மெண்ட் 20N
பம்பாய்

# சுமப்பது யார்?

எங்கே போவதாக இருந்தாலும் எங்கள் மாமா ஏகமாக மூட்டை முடிச்சுகள் கட்டிவிடுவார். அப்பப்பா! மூட்டை முடிச்சென்றால் சாமான்ய மூட்டை முடிச்சா? நினைத்தாலே பகீர் என்கிறது! அவ்வளவையும் சுமந்து செல்ல வேண்டிய பொறுப்பு என்னுடைய தலையில்தான் விழும்.

வீட்டை விட்டு வெளியூருக்குப் போவதென்றால் எந்தச் சாமான் எப்பொழுது தேவைப்படுகிறதோ, யார் கண்டார்கள்? அவர் போகும் ஊரில் அந்தச் சாமான் கிடைக்காமற் போய் விட்டால்....?அதனால் தான் மாமா வீட்டையே ஒருசிறு பொட்டணமாகக் கட்டிக் கொண்டு புறப்படுவது என்ற பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தார்.

மாமாவுக்கு ஏற்ற மருமான் நான். அவரது அபார அன்புக்குப் பாத்திரமாகி விட்ட என் தலையில் பொதி சுமக்கும் முழுப் பொறுப்பும் விழுவது இயல்புதானே?

எங்கள் மாமாவுக்கு அசைக்க முடியாத ஒரு நம்பிக்கை. அவர் ஆனந்தமாக வெற்றிலையைக் குதப்பிக் கொண்டு, கச்சத்தின் ஒரு தலைப்பைக் கையில் பிடித்துக் கொண்டு, "பாக்கியசாலியின் சுமையைப் பகவானே சுமக்கிறான்!" என்று அடிக்கடி சொல்லுவார். அந்தக் காட்சியைக் காணக் கண் கோடி வேண்டும்.

அந்தத் தடவை மாமியின் தங்கைக்குக் கலியாணம். நீடூர் போக வேண்டியிருந்தது. மாமா வீட்டுச் சாமான்களில் தேவையானதை ஒவ்வொன்றாகத் தேடி மூட்டை கட்டத் தொடங்கி விட்டார்.

நீடூர் சின்ன ஸ்டேஷன். சிதம்பரச் சிவிருந்து ஆறாவதோ ஏழாவதோ? அங்கே வண்டி ஒரு நிமிஷம் தங்கினால் பெரிது. மாமா மூட்டை கட்டுவதை விஸ்தரித்துக் கொண்டே போகவே, மாமிக்கு எரிச்சல் எரிச்சலாக வந்தது. "இவ்வளவு சாமான்கள் எதற்கு? நீடூரில் ஒரு வாரம் தங்கப் போகிறோம். அது வேற்றூரா? நம் ஊர்; நம் வீடு. நம் வீட்டில் போய்த் தங்குவதற்கு இந்த மலையைச் சுமப்பானேன்?" என்றாள்.

மாமாவா விடுவார்? 'சிறு துரும்பும் பல் குத்த உதவும்' என்ற வாழ்க்கை வேதாந்தத்தை நன்கு உணர்ந்தவர் ஆயிற்றே! "இந்த உலகத்தில் வேண்டாத பொருள் என்று ஒன்றுகூடக் கிடையாது. தேவைப்படும் பொழுதுதானே அதன் அதன் மகிமை தெரியும்?" என்றார் அவர்.

மாமியின் கோபம் கொழுந்து விட்டு எரியத் தொடங்கியது. "நீடூரில் வண்டி நிமிஷ நேரம்கூட நிற்காது. தெரியும் அல்லவா? அதற்குள் உங்களுடைய சாமான்களை இறக்குவது யார்? பாதிக்கு மேல் வண்டியோடு போக வேண்டியதுதான்!" என்றாள்.

மாமா அலட்சியமாக நகைத்தவாறு, "நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே. உன் சாமான்கள் எல்லாம் பத்திரமாக இருக்கும். 'பாக்கியசாலியின் சுமையைப் பகவான் சுமக்கிறான்' என்று நீ கேள்விப்பட்டதில்லையா? நமக்கு எந்த நஷ்டமும் வராது. நான் சொல்வதை நம்பு!" என்றார்.

"நன்றாய் நம்பினேன்!" என்று சொன்ன மாமி, அதற்கு மேல் பேச்சை வளர்த்தவில்லை. அவளுக்கு அந்தப் பழமொழி தெரியுமோ, தெரியாதோ? தெரிந்து கொண்ட மாதிரி காட்டிக் கொள்ளவில்லை.

நாங்கள் ஸ்டேஷன் போய்ச் சேருவதற்கும் வண்டி வந்து நிற்பதற்கும் சரியாக இருந்தது. கூலிகள் ஓடிவந்து சாமான்களைச் சூழ்ந்து கொண்டு தலைக்கு ஒரு சாமானைத் தூக்க ஆரம்பித்தார்கள். மாமா தம் கைப் பிரம்பைச் சுழற்றிக் கொண்டே, "எங்கள் சாமான்களைக் கொண்டு போக எங்களுக்குத் தெரியும். நீங்கள் பேசாமல் போங்கள்!" என்று அதட்டி அனுப்பி விட்டார். பிறகு, "சாந்தா! வண்டி புறப்பட நேரம் இருக்கிறது. நீ இங்கேயே நின்று சாமான்களைப் பார்த்துக் கொண்டிரு. நானும் உன் அம்மாவும் முன்னால் போய் இடம் தேடிப் பிடிக்கிறோம். சிவசங்கரா! நீ ஒவ்வொன்றாகச் சாமான்களை எடுத்து வா!" என்றார்.

மாமி வெற்றிலைச் செல்லத்தை எடுத்துக் கொண்டாள். மாமா டிபன்காரியரை எடுத்துக் கொண்டார். பிறகு அங்கிருந்த மூட்டையை ஒரு நோட்டம் விட்டு விட்டு மாமாவும் மாமியும் நடந்தார்கள்.

பகவான் தூக்காவிட்டாலும் பாக்கியசாலியான மாமாவின் மூட்டைகளை மருமானை நான் சுமக்கும்படியாகி விட்டது. உரலில் தலையைக் கொடுத்தபின் உலக்கைக்குப் பயந்தால் கட்டி வருமா? நான் தைரியமாகவே இருந்தேன்.

கல்யாண காலத்தில் கூட்டத்துக்குக் கேட்க வேண்டுமா? வண்டியில் கால் வைக்க இடம் இல்லை. இவ்வளவு கூட்டத்திலும் மாமா எப்படியோ ஒரு காலிப் பெட்டியைத் தேடிக் கண்டு பிடித்து விட்டார். மூன்றாம் வகுப்புப் பெட்டிதான். ஆனால் கதவில் ஆங்கிலத்தில் எழுதிய சீட்டு ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது. 'ஆங்கிலேயர்களுக்கு மட்டும்' என்று அதில் தெளிவாகக் குறிக்கப்பட்டிருந்தது. அந்த நாட்களில் ஒவ்வொரு வண்டியிலும் ஒவ்வொரு பெட்டி ஆங்கிலேயர்களுக்கென்று 'ரிஸர்வ்' செய்யப்பட்டிருப்பது வழக்கம்.

அந்த அறிக்கையை அலட்சியம் செய்து விட்டு மாமா தமக்கென்று ஜன்னல் ஓரமாக ஒரு ஆசனம் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார். மாமியும் அவர் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள். நான் ஓடி ஓடி ஒவ்

ரா.வீ

வொரு சாமானை எடுத்து வந்து மாமா சொன்ன இடத்தில் வைத்தேன். நாங்கள் எல்லோரும் சௌகரியமாக உட்கார்ந்த பின் தான் வண்டி புறப்பட்டது.

பெஞ்சியில் உட்கார்ந்த நான் கழுத்தைப் பிடித்துக் கொண்டேன். மாமி அதைப் பார்த்து விட்டாள். "ஏண்டா! கழுத்தை வலிக்கிறதா?" என்று பரிவோடு கேட்டாள். அப்பொழுதுதான் என் தவறு எனக்குப் புலனாகியது. "இல்லையே!" என்று சொல்லிச் சட்டென்று கழுத்திலிருந்து கையை எடுத்துக் கொண்டேன்.

மாமி என் வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. "ஹும்! உங்க மாமாவும் ஒரு மனிதர்மாதிரி! குருவியின் தலையில் பனங்காயை வைப்பதுபோல் பூப் போன்ற குழந்தையின் தலையில் இத்தனை பெரிய சுமையையா தூக்கி வைப்பார்கள்?" என்றாள்.

மாமா மிகவும் கம்பீரமாக, "இங்கேதான் நீ மிகப் பெரிய தவறு செய்கிறாய். சுமை தாங்குவதில் தவறு ஒன்றும் இல்லை. இதைப் போன்ற நல்ல தேகப் பயிற்சி வேறு ஒன்றும் கிடையாது. இப்படிச் சுமை தூக்குவதனால் கழுத்துக்கு என்ன பலம் ஏற்படுகிறது, தெரியுமா?" என்றார்.



தேகப் பயிற்சியின் தத்துவங்களை அறியாத மாமி பேச்சை மாற்றி, "அது சரி. நீடூரில் போய் என்ன செய்வது? வண்டி நின்றதும் நிற்காதது மாகப் புறப்பட்டுவிடுமே! என் பிறந்த ஊர் லக்ஷணம் எனக்குத் தெரியாதா? இவ்வளவு சாமான்களையும் சின்னஞ்சிறு குழந்தையான சிவசங்கரன் எப்படி இறக்குவான்?" என்று கவலையுடன் கேட்டாள்.

மாமா குரலில் காம்பீர்யத்தை வரவழைத்துக் கொண்டு, தாம் முன்பு சொன்னதையே திருப்பிச்சொன்னார்.

"வீணில் நீ எதற்காகக் கவலைப்படுகிறாய்? பாக்கியசாலியின் சுமையைப் பகவான் தாமாகவே இறக்குகிறார்!"

மாமாவின் கனகச்சிதமான இந்தப் பல்லவியைக் கேட்டதும் என் உள்ளம் அப்படியே உட்கார்ந்துவிட்டது. நீடூரில் வண்டி அதிக பக்ஷம் ஒரு நிமிஷம் நிற்கலாம். அதற்குள் இத்தனை சாமான்களையும் இறக்கி, நான் மாமாவிடம் நல்ல பெயர் வாங்கியாக வேண்டுமே! மாமா கூறும் பகவான் எங்கே வரப் போகிறார்? சுற்றிச் சுற்றிப் பார்த்தாலும் என்னைத் தவிர வேறு யாரும் இருப்பதாக எனக்குப் புலனாகவில்லை. பரிதாபமாக ஒரு முறை சாமான்களைப் பார்த்தேன். உள்ளத்திலும் உடலிலும் ஒரே காலத்தில் உதறல் எடுத்து விட்டது.

கொள்ளிடத்தில் வண்டி நின்றது. சில வெள்ளையர்கள் ஏறினார்கள். தங்களுக்கென்று 'ரிஸர்வ்' செய்யப்பட்டிருக்கும் பெட்டியில், ஒரு கறுப்பன் மூட்டையும் முடிச்சுமாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்ததும் ஒரு கணம் அவர்கள் வியப்பினால் வாய் அடைத்துப் போய் நின்றார்கள்.

வண்டி புறப்பட்டு விட்டது. ஒரு வெள்ளைக்காரன் மாமாவைப் பார்த்துக் கொச்சைத் தமிழில், "நீ இந்த வண்டியில் ஏன் ஏறினே, மேன்? நீ பார்க்கல்லே? இது துரைமார்கள் வண்டி. அடுத்த ஸ்டேஷன் வந்ததும் நீ எல்லாம் இறங்கிடணும்!" என்றான்.

"எதற்காக இறங்கணும்?"

மாமா கோபிப்புடன் கேட்டார்.

"எதற்காக இறங்கணுமா? ஆல்ரைட்! அடுத்த ஸ்டேஷனில் பார்த்துக்கொள்கிறேன் உன்னை!" என்றான் அந்த ஆங்கிலேயன் கடுமையான குரலில்.

சீயாழி வந்ததும் ஒரு ஆங்கிலேயன் இறங்கிப் போய்க் கார்டைக் கையோடு அழைத்துக் கொண்டு வந்தான்.

"சார்! நீங்கள் எல்லோரும் இறங்கி விடணும். துரை உடுப்பு போட்டுக்கொண்டிருப்பவர்கள்தான் இந்த வண்டியில் உட்காரலாம்" என்றார் ரெயில்வே கார்டு.

"அப்படியா?"

மாமா நிச்சிந்தையாக ஒரு பெருமூச்சு விட்டுக் கேட்டார்:

"இதை நீங்கள் முன்பே சொல்லி யிருக்கக் கூடாதோ? எங்களிடமும் வேண்டிய துரை உடுப்புக்கள் இருக்கின்றனவே! கைச் சட்டை, கால் சட்டை, கழுத்துப் பட்டை, தொப்பி எல்லாமே இருக்கின்றன. இப்பொழுதுதான் என்ன? கொஞ்சம் அவகாசம் தாருங்கள். இதோ போட்டுக் கொண்டு விடுகிறேன். சாந்தா! பெட்டிச் சாவி எங்கே இருக்கிறது? தேடி உடுப்பை எடு. உடுத்திக் கொண்டு நாமும் இவர்களைப் போல் துரைமார்களாகி விடுவோம்!" என்றார்.

வாய் திறக்கத் தெரியாத கார்டு விர்ரென்று வேறு பக்கம் போய் விட்டார். மாமாவும் துரை உடுப்பை எடுக்கச் சொல்லி வற்புறுத்தவில்லை. முதலில் உடுப்புகள் டிரங்குப் பெட்டியில் இருந்தால் அல்லவா அவர் எடுக்கச் சொல்வதற்கு?

வண்டி சீயாழியை விட்டுப் புறப்பட்டு விட்டது. வெள்ளையர்கள் தங்கள் ஜபம் சாயாமற் போகவே, உரக்கக் கூச்சலிடத் தொடங்கி விட்டார்கள். தலைவலி தாங்காமல் நாங்கள் இறங்கி விடுவோம் என்ற எண்ணம் அவர்களுக்கு. மாமா காதில் பஞ்சை அடைத்துக் கொண்டு பேசாமல் இருந்து விட்டார். மாமி மட்டும் பயந்தே போய் விட்டாள். பயப்படாமல் இருக்கு

# மகத்தான விலைக் குறைவு

**மிக நவீனமான 1956–ம் வருஷ ஸ்பெஷல் மாடல்கள். மிக மிக சேர்த்தி யான மெஷின் & டிசைன் ஒவ்வொன்றும் 3 வருஷங்கள் உத்திரவாதம்**

இலவசம் : ஏதாவது மூன்று கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு கைக் கடிகாரமும், இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு அலாரம் டைம்பீஸும், ஒரு கடிகார ஆர்டருக்கு ஒரு கோல்டு கேப் பவுண்டன் பேனாவும் இனாம்.



**நெ. 1181 வாட்டர் புரூப் 10½ சைஸ்**

15 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 36/-
17 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 40/-
17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 54/-
21 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 56/-
21 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 64/-



**நெ. 1183 வளைவு வடிவம் 7¾ சைஸ்**

15 ஜுவல்ஸ் பிரைட் க்ரோம் 32/-
15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 38/-
17 ஜுவல்ஸ் ரோ. கோ. (லீவர்) 63/-



**நெ. 1185 தட்டை வடிவம் 10½ சைஸ்**

5 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 19/-
5 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு C/S 21/-
15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 28/-
17 ஜுவல்ஸ் க்ரோம் கேஸ் 37/-
17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 42/-



**நெ. 1186 லேடீஸ் 5¼ சைஸ்**

15 ஜுவல்ஸ் பின் லீவர் R/G 45/-
17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 48/-
17 ஜுவல்ஸ் .. (20 மைக்ரோன்) 65/-
21 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 68/-



**நெ. 1182 வாட்டர் புரூப் 8¾ சைஸ்**

16 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 40/-
17 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 44/-
17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 54/-
21 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 58/-
21 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 68/-



**நெ. 1184 டோனோ வடிவம் 7¾ சைஸ்**

15 ஜுவல்ஸ் பிரைட் க்ரோம் 34/-
15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 40/-
17 ஜுவல்ஸ் ரோ. கோ. (லீவர்) 65/-



**பாக்கெட் கடிகாரம்**

ஜுவல் உள்ளது 18/- — 15 ஜுவல்ஸ் 27/-

**அலாரம் டைம்பீஸ்**

3" டயல் அலாரம் ... 15/-
ஸ்மித் அலாரம் 4½" டயல் ... 18/-
உயர்ரகஅலாரம் 5" டயல் ... 22/-
டபுள் பெல் 5" டயல் ... 18/-

**PIONEER WATCH CO.,** POST BOX NO. 11428, CALCUTTA-6

மாறு அவளைச் சமாதானப்படுத்தி விட்டு. "ஏன்டா சங்கரா! உனக்கு நாய் மாதிரி குரைக்கத் தெரியுமாடா?" என்று கேட்டார் மாமா.

"ஓ! தெரியுமே!" என்று நான் தலையைப் பலமாக ஆட்டினேன்.

"அப்படியானால் ஒன்று செய். நடு நடுவில் நாய்மாதிரி குரை!"

நான் குரைத்தேன்: "வள், வள்!" என்று.

"இன்னும் சற்று உரக்க!"

"வள், வள், வள்!"

வெள்ளையர்கள் கூச்சலிடுவதை நிறுத்தினார்கள். அவர்களைக் கிலி பற்றிக் கொண்டது. 'இந்தப் பையன் ஏன் இப்படிச் செய்கிறான்?' என்று மாமாவைப் பார்த்துத் திகிலுடன் கேட்டார்கள்.

மாமா முகத்தில் எவ்வித உணர்ச்சியையும் காட்டிக் கொள்ளாமல், "ஒன்றுமில்லை. பத்துப் பதினைந்து நாட்களுக்கு முன்னால் இந்தப் பையனை ஒரு வெறி நாய் கடித்து விட்டது!" என்றார்.



அதைக் கேட்டதும் அவர்கள் தங்கள் தங்கள் ஆசனத்தில் துள்ளிக் குதித்தார்கள்.

"ஆ! 'ஹைட்ரோ போபியா'? அட கடவுளே! ஏன் ஐயா அதை முன்னாலேயே சொல்லித் தொலைக்கவில்லை? இவன் எங்களைக் கடித்து விட்டால்....?" என்று ஏககாலத்தில் எல்லோரும் கோஷ்டியாகச் சேர்ந்து கேட்டார்கள்.

"கடிக்கலாம். ஆனால் உங்களைக் கடிக்க மாட்டான், பயப்படாதீர்கள்" என்று மாமா அவர்களைத் தேற்றினார்.

"வெறி நாய் கடித்தவனை நம்ப முடியுமா?"

வைத்தீசுவரன் கோயில் ஸ்டேஷன் வரும் வரை அவர்கள் பரபரப்பு அடங்கவில்லை. அலை பாய்ந்தார்கள். வண்டி நின்றதோ, இல்லையோ, அவர்கள் பொத் பொத்தென்று கீழே குதித்து விட்டார்கள்.

மாமாவுக்குப் பெருமிதம் தாங்கவில்லை. பொருள் பொதிந்த ஒரு புன்னகை பூத்தார். நாங்கள் கட கடவென்று சிரிக்கத் தயாராகி விட்டோம். அதற்குள் ஒரு ஆங்கிலேய வாலிபன் வண்டியில் ஏறிக் காரியத்தைக் கெடுத்து விட்டான். எங்களிடம் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் ஒரு மூலைப் பெஞ்சியில் போய் உட்கார்ந்து கொண்டான்.

மாமாவுக்கு ஒரு குசி தட்டியது. காதோடு காதாக, "சிவசங்கரா! வண்டி புறப்பட்டதும், உம்..!" என்று என்னை மீண்டும் ஒருமுறை முடுக்கி விட்டார்.

வண்டி வைத்தீசுவரன் கோவிலை விட்டுப் புறப்பட்டது. வாலிபன் ஒரு புஸ்தகத்தைப் பிரித்து வைத்துக் கொண்டு சுவாரஸ்யமாகப் படிக்க ஆரம்பித்தான்.

நான் உறுமினேன். 'உர், குர், டுர்!'

வாலிபன் துணுக்குற்றுப் புஸ்தகத்தை மூடினான். பிறகு மாமாவைப் பார்த்து, "இந்தப் பையனுக்கு என்ன உடம்பு?" என்று சந்தேகத்துடன் கேட்டான்.

ஆங்கிலேய வாலிபன் நல்லதமிழில் பேசவே மாமாவுக்குச் சற்று வியப்பாகப் போய் விட்டது. "இவனை நாய் கடித்து விட்டது; அதனால் 'ஹைட்ரோபோபியா' கண்டிருக்கிறது!" என்று கூறினார்.

"ஓகோ!"

அலட்சியமாகக் கூறிய வாலிபன், மறுபடியும் மூடிய புஸ்தகத்தைப் பிரித்து வைத்துக் கொண்டு படிக்கலானான்.

அவனது இந்தச் செயலைக் கண்ட எனக்கு உள்ளங் காலிலிருந்து உச்சந்தலை வரை பற்றிக் கொண்டு வந்தது. மாமாவுக்கும் உள்ளூற எரிச்சல்தான். "உங்களை எச்சரிக்க வேண்டியது என்னுடைய கடமை. இவன் உங்களைக் கடித்து விட்டால்....அதற்காகத் தான் சொன்னேன்!" என்று இழுத்தார்.

வாலிபன் ஏளனமாக நகைத்து, "உங்கள் எச்சரிக்கைக்கு நன்றி. அதைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். குரைக்கின்ற நாய்கள் கடிப்பதில்லை!" என்று கூறிப் புஸ்தகத்தில் ஆழ்ந்தான்.

ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அவனைப் பற்களினால் பிடுங்கிக் குரைக்கின்ற நாய்கள் கடிப்பதும் உண்டு என்பதைக் காட்டிவிடலாமா என்று எனக்குத் தோன்றியது. ஆனால் நான் ஏனோ அவ்வாறு நாயாக மாறவில்லை. மாமா



**பிச்சைக்காரன்: தாய் தகப்பன் இல்லாத அனாதை ஐயா! தர்மம் போடுங்க!**

வும் நம்பிக்கை இழந்து போய் அயர்ந்து உட்கார்ந்து விட்டார்.

**வ**ண்டி ஆனைதாண்டவபுரத்தை அடைந்தது. இந்த வெள்ளையர்களுக்கே ஓரிடத்தில் இருப்புக்கொள்ளாது போலும். வண்டி நின்றதும் இறங்கிப் பிளாட்பாரத்தில் நடைபழக ஆரம்பித்தார்கள். ஆங்கிலேய வாலிபன் ஒருவன் எங்கள் பெட்டியில் நிஷ்கவலையாக உட்கார்ந்திருப்பதைக் கண்டதும் அவர்களுக்கு ஆச்சரியமாகப் போய் விட்டது. அவர்களில் ஒருவன் ஆங்கிலேய வாலிபனிடம், ''இந்தப் பெட்டியில்...'' என்று ஆரம்பித்தான்.

ஆங்கிலேய வாலிபன் சிரித்துக் கொண்டே, ''நான் சரி செய்து விட்டேன். இனிமேல் இவன் கடிக்க மாட்டான்!'' என்றான்.

''எப்படி?'' என்று கேட்டான் ஒருவன்.

அந்தப் பொல்லாத வாலிபன் மாமாவின் குட்டை உடைத்து விட்டான். அவன் பெட்டியில் ஏறும்பொழுது நான் ஒரு கூஜா தண்ணீரைக் குடித்துக் கொண்டிருந்தேனாம். நாய் கடித்து 'ஹைட்ரோ போபியா' என்ற வியாதி வந்தவன் தண்ணீரைக் கண்டால் பயந்து ஓடுவானாம்.

நான் மாமாவைப் பார்த்துக் 'திரு திரு' என்று விழித்தேன். இந்த விஷயத்தை முன்பே சொல்லி யிருக்கக்கூடாதா? சொல்லியிருந்தால் இத்தகைய அவமானத்துக்கு உள்ளாக வேண்டி வராதல்லவா?

வண்டி ஊதியது. வெள்ளையர்கள் கூட்டம் 'திமுதிமு'வென்று எங்கள் பெட்டியில் ஏறி விட்டது. ''அடுத்த ஸ்டேஷனில் இறங்கியாகவேண்டும்!'' என்று கண்டிப்பாகக் கூறி எச்சரித்து விட்டார்கள் வெள்ளையர்கள், மாமாவைப் பார்த்து.

மாமிக்கு அழுகையே வந்து விட்டது. ''பார்த்தீர்களா, பார்த்தீர்களா? நான் சொன்னால் கேட்டால்தானே? தெரியாத ஊரில் போய் இறங்கி எத்தனை நாழிகை சந்தி சிரிக்க வேண்டி யிருக்குமோ?'' என்று கண்ணீர் வடிக்கத் தொடங்கி விட்டாள்.

மாமா சிறிதும் கவலையைக் காட்டிக் கொள்ளாமல், ''கவலைப்படாதே, கடவுள் இருக்கிறார். நன்மையே செய்வார்!'' என்றார்.

**அ**டுத்த ஸ்டேஷனில் நிற்கப் போவதற்கு அறிகுறியாக வண்டியின் வேகம் குறைந்தது. ''நாங்கள் இங்கே இறங்க முடியாது. வரப் போகும் ஜங்ஷனில் வேண்டுமானால் இறங்கி விடுகிறோம்!'' என்றார் மாமா.

''அதெல்லாம் நடக்காது! நீ இந்த ஸ்டேஷனில் இறங்கித்தான் ஆகவேண்டும்!'' என்றான் ஒருவன் அழுத்தந் திருத்தமாக.

''முடியாது. இத்தனை சாமான்களையும் எடுத்துக் கொண்டு எங்களால் இறங்கவே முடியாது!'' என்று மாமா மறுத்தார்.

இதைக் கேட்டதும் ஒருவன் பாய்ந்து படுக்கையைத் தூக்கிக் கொண்டான். எனவே, ''வேறு வழி இல்லை. இறங்கித்தான் ஆக வேண்டும் போலிருக்கிறது!'' என்று கூறிக் கொண்டே மாமா இறங்கலானார்.

வண்டி நின்றதும் வெள்ளையர்கள் சாமான்களை யெல்லாம் எடுத்துப் பிளாட்பாரத்தில் போடலானார்கள். இரண்டு பேராகச் சேர்ந்து பெரிய டிரங்கையும் இறக்கினார்கள். எல்லாவற்றையும் இறக்கிய பின் அவர்கள் கெக்கெலி கொட்டிச் சிரிக்கவும் செய்தார்கள்.

வண்டி புறப்பட்டு விட்டது. ஆங்கிலேய வாலிபன் கையசைத்து, ''குட்பை, மிஸ்டர்!'' என்று கூறிச் சிரித்தான்.

மாமாவும் சிரித்துக் கொண்டே கை அசைத்தார். மாமிக்கு அழுகை வராத குறைதான். ''எங்கேயோ திக்குத் தெரியாத இடத்தில் கொண்டு வந்து இறக்கி விட்டார்களே! இப்பொழுது என்ன செய்வது?'' என்றாள்.

மாமா கடகடவென்று சிரித்து, ''இதுதான் நீடூர். பிளாட்பாரத்தில் இருக்கும் போர்டை நீ பார்க்கவில்லையா? நான்தான் சொன்னேனே, பாக்கியசாலிகளின் சுமையைப் பகவானே சுமப்பார் என்று!'' என்றார்.

''நீங்கள் கட்டிக் கொண்டு வந்த மூட்டையில், என் சொந்த ஊரான நீடூர்கூட அல்லவா தெரியாமல் போய் விட்டது!'' என்று சொன்னபொழுது மாமியின் கண்களில் ஒளி பளிச்சிட்டது. ''பாக்கியசாலிகளின் சுமையைப் பகவான் சுமப்பார்!'' என்ற மாமாவின் கொள்கையில், அவளுக்கும் நம்பிக்கை ஏற்பட்டு விட்டதாகவே தோன்றியது.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

# உங்கள் வீட்டுக்கு வேண்டியது விம்

## அப்பழுக்கின்றி விரைவில் சுத்தம் செய்யும்



விம் உபயோகித்து எப்போதாவது தரையை சுத்தம் செய்ததுண்டா? எவ்வளவு எளிதாக, துரிதமாக சுத்தம் செய்தது என்று பிரமித்துப்போவீர்கள். விஞ்ஞான முறையில் துலக்கும் பவுடர் விம். அழுக்கும் பசையும் அதை எதிர்த்து நிற்க முடியாது. ஒரு ஈரத்துணியில் விம் தூவி, தேய்த்து அலம்பி, உலரவிட்டுப்பாருங்கள்—பளிச்சென்று எல்லாம் பரிசுத்த மயம்! மேலும் சமையலறை சாமான்கள், எவர்ஸில்வர், சாதாரண பீங்கான், கண்ணாடி சாமான்கள், வாஷ்பேஸின்கள், ஓடுகள் முதலியவைகளுக்கும் விம் உபயோகியுங்கள். அது சிக்கனமான தூள்! சிறிதளவு விம் உபயோகித்தாலும் பரிசுத்தம் அதிகமாகச் செய்யும்.













**விஞ்ஞான முறையில் துலக்கும் பவுடர் விம்**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

